தத்துவ ஆராய்ச்சி No. 1.

# ஸ்மிருதி விளக்கம்



ஆக்கியோன்

சித்தர். A. V. R. சரவணபவன்



 1940 [விலை அணா 4·

உ

# No. I. தத்துவ ஆராய்ச்சி

# ஸ்மிருதி விளக்கம்

தத்துவ ஆராய்ச்சி சிகாமணியென்று
மதுரை சித்தவைத்திய ஆராய்ச்சி சங்கத்திலும்
சென்னை மாநகர சித்தவைத்திய மகாநாட்டிலும்
தங்கமெடல்களும் கவர்ன்மெண்டு R. கிராஸ்
சர்டிபிகேட்டும் பெற்ற

## சித்தர் A. V. R. சரவணபவன்

பலர் வேண்டுகோட்கிணங்கி
தொகுக்கப்பெற்றது.

மதுரை தளவாய்த்தெரு,
விவேகாநந்தா பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.



இதன் விலை] 1940 [அணா 12

# முகவுரை.

உலகில் தற்சமயம் எங்குபார்த்தாலும் மதப்பிரசாரங்கள் நடைபெற்று வருகின்றன. அவரவர்கள் தத்தம் மதங்கள் நிலைபெற்று விர்த்தியடைவதற்கு வேண்டிய முயற்சி செய்துகொண்டு வருகிறார்கள். இதற்கிடையே இந்நூலாகிய "ஸ்மிருதி விளக்கம்" என்னும் தத்துவ ஆராய்ச்சி உதயமாகின்றது.

மேற்படி நூலின் கருத்து எம்மதத்தைப் பற்றியும் தாழ்த்தியோ, மிகைபடக் கூறியோ, தூஷணை செய்தோ கூறப்படுவனவல்ல. ஸ்மிருதிகளிலும் புராண இதிகாசங்களிலும் விளக்கப்பட்டுள்ளனவற்றை சகல மதத்தினரும் தெரிந்து கொள்வதன்பொருட்டே இதனை எளிய செந்தமிழ் நடையில் எழுதப்பெற்றது.

ஆகையால் மதப்பற்றுதலுடையாரும் மற்றவர்களும் இச்சிறு நூலை யேற்று ஆதரிப்பதுடன் இதிற்காணும் குற்றங்களைந்து குணத்தைக் கைக்கொள்ளுவார்களென்பதும் எமது துணிபு.

தவிர இந்நூலில் இன்னும் விசேஷமாக ஏதேனும் சொல்லப்படுவனவும் சீர்திருத்தங்களு மிருப்பின் தெரிவித்தால், அங்ஙனம் ஏற்று அடுத்த பதிப்பில் சேர்ப்பதுடன், அன்னார்கட்கு மிகுந்த நன்றி யறிதலுடையவனாகவு மிருக்கின்ற

ஆக்கியோன்.

சித்தர் A. V. R. சரவணபவன்.
தத்துவ ஆராய்ச்சி நிபுணர்,
10-கீழவடம்போக்கித்தெரு, மதுரை.

பசுமலை

உயர்தர வழக்கறிஞரும், தமிழ்ப் பேராசிரியருமாகிய

திருவாளர் **S. S. பாரதியாரவர்கள்**

## அபிப்பிராயம்.

சித்தர் திரு. சரவணபவன் அவர்கள் வெளியிடும் ஸ்மிருதி விளக்கம் முதலியவைகளைப் படித்துப் பார்த்தேன். அவர்கள் நோக்கம் எனக்கு முழுதும் உடன்பாடே. தமிழர் தங்கள் பழநூன்மரபுகளையும் உண்மைகளையும் ஆராய்வதோடு, பிறமதவாதிகளின் மரபுகளையும் கொள்கைகளையும் உள்ளவாறுணர்ந்து ஒத்துநோக்குதல் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்பதென் கருத்து. அதனால் இவர்கள் நன்முயற்சி பாராட்டத்தக்கது.

பசுமலை,
9—11—40. } **S. S. Bharathi.**

## சித்த வைத்திய ஆராய்ச்சி சங்கம்

### முனிச்சாலைரோட், மதுரை.

---

சகல மனித ஜென்மத்தைச் சகோதரமாக நினைத்து சகல மதங்களுடைய ஆராய்ச்சியும் எல்லோரும் தெரிய வேண்டியதை முன்னிட்டு சிறியநடையில் திரு. சித்தர் A. V. R. சரவணபவன் (தத்துவ ஆராய்ச்சி நிபுணர்) அதிக பிரயாசையுடனும் அருமையாகவும் எழுதியதைப் பார்வையிடப்பட்டது. எந்த மதத்தையும் இந்துமதம் குற்றமன்னியில் ஒப்புக்கொள்ளக்கூடியதே. நல்லெண்ணத்துடன் வெளியேறிய இந்நூல்கள் மென்மேலும் விருத்தியடைய இச் சங்கம் கடவுளை தோத்திரஞ்செய்கிறது.

காரியதரிசி

9—11—40 }
மதுரை. }

**ச. சுப்பையா முதலியார்,**
சித்தவைத்திய ஆராய்ச்சி சங்கம்,
முனிச்சாலை ரோடு, மதுரை.

# வேண்டுகோள்.

ஸ்மிருதிவிளக்கம் சகல ஜனங்களுக்கும் தெரிய, அச்சிடவேண்டியது அவசியம்.

டாக்டர். R. M. P. ராமசாமி நாயுடு,
ஞானகுருபரன் சித்தர் தர்ம்ம வைத்தியசாலை,
யானைக்கல்தெரு, மதுரை.

---

டாக்டர். R. S. ராமசாமி ஆசாரி,
சக்திகுருபரன், சித்த தர்ம்ம வைத்தியசாலை,
யானைக்கல்தெரு, மதுரை.

---

டாக்டர். எஸ். எஸ். சந்திரன், செக்ரட்டேரி
சித்தவைத்திய (சங்கம்-ரிஜிஸ்டர்டு) 1929.
ஆபீஸ், ஞானகுருபரன் சித்தர் தர்ம்ம வைத்தியசாலை,
மதுரை.

ஸ்மிருதி விளக்கம்.

# பொருள் அட்டவணை.

# ஸ்மிருதி விளக்கம்

## 1. சரித்திரகால விபரம்

கிறிஸ்துவுக்கு

முன் 13000. கிறிஸ்து பிறப்பதற்கு 13-ஆயிர வருஷத்துக்கு முன் அதாவது இது முதல் 15000 வருஷங்களுக்கு முன் இந்தியாவிலிருந்து வெளியேறி பர்சியா, பாபிலோன், நைல், யூப்பர்டீஸ் நதிக்கரை முதலான இடங்களிலும் சைனு, ஜப்பான், அமெரிக்கா, ஆப்பிரிக்கா முதலிய இடங்களிலும் ஜனங்கள் குடியேறி வசித்து நாகரீகமடைந்தது.

,, 8000 இதுமுதல் 10000 வருஷ சரித்திர காலம்.

,, 6000 மனுச்சக்கரவர்த்தி பாபிலோன் தேசத்தை அரசாண்டது. பர்சியாவிலிருந்து பாரசீகர்களும் இந்தியாவுக்கு வடக்கே யிருந்த யவனர்களும் வட இந்தியாவில் குடியேறியது.

,, 5000 பாபிலோனில் பிரியாமிட்ஸ் செய்தது.

,, 2000 பாபிலோனியர்கள் வட இந்தியாவில் குடியேறி சூரியனையும் அக்கினியையும் தெய்வமென்று வணங்கிக்கொண்டு ஆரியர்கள் எனப் பெயரிட்டுக் கொண்டது.

ஆரியர்கள், சுரர்கள் தேவர்கள் எனப் பெயராம். பின் தென் இந்தியாவில் தமிழர்களுடன் போர் புரிந்து தோல்வியுற்றது.

கி—மு—1000 அகஸ்தியர் சூழ்ச்சி செய்து வட இந்தியாவி லிருந்த ராமனை தென் இந்தியாவில் அரசன் நிலந்தரு பாண்டியன் என்னும் ராவணனுடன் போர்புரியச்செய்தது. ஐரோப்பா முதலிய விடங்களில் ஜனங்கள் குடியேறியது. இந்தியா வில் பார்சீகர்கள் என்னும் ஸ்மிருதிப் பிராம ணர்கள் இருக்கு வேதம், பாரதக்கதை, புராண ஸ்மிருதிகளை உண்டாக்கி அரச வணிக வேளாள என்றிருந்த மூன்று வகுப்பை தங்க ளுடன் பிர்ம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர ரென நான்காக்கியது.

சிவன் விஷ்ணு பிர்ம்மனென்றும் மும்மூர்த் திகளை வணக்கம் செய்துகொண்டு மூன்று யுகங்கள் முன்னிருந்ததாகவும் கலியுகத்தில் 2000 வருஷம் செல்லாகி யிருப்பதாகவும் கற் பித்தது.

,, 700 ஐரோப்பாவில் உரோமாபுரி அரசாக்ஷி இந்தி யாவில் வரதாயின. ஞான புத்திரன் கவுதமன் இவர்களால் (Right faith knowledge and action) ஜீவகாருண்ய ஐயினமத்ம் விருத்தியடைந்தது.

,, 600 உபநிடத உற்பத்திகாலம்.

,, 550 இந்தியாவில் புத்தர்கள் விருத்தி. ஆரியர்கள் புத்தர்களை சூழ்ச்சி செய்ய ஆரம்பித்தது. சீனு வில் புத்த மதம் உற்பத்தி.

,, 400 மகாபாரத புராண காலம்.

கி—மு—350 அலெக்ஸாந்தர் இந்தியாவின்மீது படையெடுத்தது. புத்த அரசன் சந்திரகுப்தனும் செலியூக்கசும் சமாதானம்.

,, 250 மகத தேசம் புத்த அரசனை அசோகனல் ஆளப்பட்டது.

,, 58 விக்கிரமாதித்தன்.

கிறிஸ்து பிறந்தபின் 1 வருஷத்தில் இந்தியாவில்உக்ர குமார பாண்டியன் கடைச்சங்கம் திருவள்ளுவர் முதலியோர்காலம்.

,, 300 சீனு, ஜப்பான் முதலியவிடங்களில் புத்தமத விர்த்தி; இந்தியாவில் இந்துமத அழிவு.

,, 700 இந்தியாவில் அழிந்துபோன இந்து மதம் வேரூன்றப்பட்டது.

,, 800 எகிப்தில் மகம்மது அரசர்கள் வம்சம் ஸ்தாபிக்கப்பட்டது.

,, 1000 கஜினிமாமூதுஇந்தியாவின்மீதுபடையெடுப்பு.

,, 1200 இந்தியாவில் புத்தமதம் நசித்தது.

,, 1400 கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டது.

,, 1500 போர்ச்சுகீஸ்காரர்கள் இந்து சமுத்திரம் வந்தது.

,, 1600 பிரான்சுக்காரர் முதல் முதல் இந்தியாவுக்கு வந்தது.

,, 1605 ஈஸ்ட் இந்தியா கம்பேனி ஏற்படுத்தி இங்கிலீஷ்காரர்கள் முதல் முதல் இந்தியாவுக்கு வியாபாரிகளாய் வந்தது.

---

## 2. உலக நடப்பு

| | | | குறுக்களவு மைல் |
|---|---|---|---|
| பூமி, வஸ்துகள் ஜலத்தைவிட | $5\frac{1}{2}$பங்கு | கனம் | 7925 |
| சந்திரன் | ,, $3\frac{1}{2}$ | ,, | 2162 |
| சூரியன் | ,, $1\frac{1}{2}$ | ,, | 866400 |
| நக்ஷத்திரங்கள் | ,, ,, | ,, | பூமியைவிட |

100000 பங்கு அதிகம். 2/55. சி. க.

கரம் வீட்டிலிருக்கும்போது பூமி சுற்றுவ்தால் 1 மணிக்கு 115000 மைல் பிரயாணம்.

பூமி தன் அச்சில் சூரியனை சுற்றுகிறது 1 மணிக்கு 66000 மைல் 2/27 சி. க.

நா. மணி. மினி.

சூரியன் தன்னைச்சுற்றுவது 25 8 10=2/28 சி. க.

ஆனி 7வ ஜூன்21வ சூரியன்தெற்குவழிதிரும்புதல் பகல்குறைவு
மார்கழி5வ டிசம்பர்23வ ,, வடக்கு ,, இரவு ,,
புரட்டாசி7வ செப்.23வ ,, மத்தியரேகை ,, சமம்
பங்குனி9வ மார்ச்சு21வ ,, ,, ,, ,,

பகல் 3 மாதம், இரவு 3 மாதம் வடதுருவத்தில் நடுநிசி சூரியன் மேற்கில் உதித்து கிழக்கில் செல்லுகிறது.

(நார்த்கேப்) நார்த் போலியிலிருந்துதான் சூரிய வெளிச்சம் முதல் முதல் வந்தது.

ஆராய்ச்சிக்காரர் அவ்விடம் தங்கியிருக்கிறார்கள். கெடியாரமூலம், மணி தெரியவேணும். அநேகம்பேர் யாத்திரை வாசிகளாகப்போய் அவ்விடம் வசிக்கிறார்கள்.

70 டிக்கிரியுள்ள டிரான்ஸோ என்ற ஊரிலுள்ள ஆகாய ஆராய்ச்சி கண்ணுடி மூலம் சூரியன் பிரதக்ஷணத்தின் அமைப்பு ஜொலிப்பைப் பார்க்கலாம்.

## 3. பிர்ம்மா உற்பத்தி

விஷ்ணு=ஆதிசேஷன்மீது ஆலிலைமீது, திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருந்தார். அவர் உந்தி (நாபி)க், கமலத்தில் பிர்ம்மன் பிறந்தது. ஜீ. கோ. 37

சகல வேதங்களையும் உபதேசித்து அதன் பலத்தால் லோகங்களை சிருஷ்டிக்கச் செய்தார்.

பிர்ம்மன்:—இப்பூமியையும், சகல உயிர்கள், பொருள்கள் சிருஷ்டித்தார். தன் சரீர அவயவங்களிலிருந்து 4 வகை மனிதரையும் பெற்றார். தன் தேவியை நாவில் வைத்திருக்கிறார். மகனைச் சபித்தார். ஜீ. கோ. 38

விழித்ததினாலே இந்த தாவர சங்கமத்தை யுண்டு பண்ணியும், உறங்குதலினாலே அழித்தும் தான் அழிவில்லாமலே இருக்கிறார். மனு. அத் 1 சுலோகம் 57.

வயது 4 யுகங்கள் 1000 தடவை வந்தால் பிர்மாவுக்கு ஓர்பகல்.
4 ௸ ௸ ௸ ஓர்இரவு.

பகலில் 14 லோகங்களை சிருஷ்டிக்கவும் பிரகாசிக்கும், இரவில் 14 லோகங்களை அவாந்தர பிரளயத்தில் அடையும். மறுபடி பகல்பொழுது வரும்போது சிருஷ்டிப்பார். நூறு ஆண்டுகள் இருந்து பின் தன்னிடம் வரும்படி பிர்ம்மாவுக்கு விஷ்ணு கட்டளை.

பிர்ம்மா உலகத்தை சிருஷ்டித்து விஷ்ணுவை ரக்ஷகனாக ஏற்படுத்த விஷ்ணு உலகங்களை, தன் உதரத்தில் வைத்துக் கொண்டார். ஈஸ்வரன் திருவோடு எடுத்து பிச்சைக்கு வர அகஸ்தியமுனிவர் ஈஸ்வரனை அதோ செடியில் தொங்கிக்கொண்டிருக்கும் கமண்டலத்தில் போகும்படி சொல்ல, ஈஸ்வரனும் அதற்குள் சென்று அக்கமண்டலத்தில் சகல சமுத்திரங்களும் அச்சமுத்திரத்தின் மத்தியில், பிர்மாண்ட

மான ஓர் ஆலவிருக்ஷமும், அம்மரத்தின் ஓர் இலையில் பள்ளி கொண்டிருக்கும் மகாவிஷ்ணுவையும் கண்டு வெளிவந்தார்.

பிரம்மா அவ்வாறே சென்று கமண்டலத்திலுள்ள சமுத்திரங்களையும் ஆலவிருக்ஷத்தின் இலையில் உறங்கிக் கொண்டிருக்கும் மகாவிஷ்ணுவையும் கண்டு பூலோகத்தை தேட எத்தனிக்கையில், மகாவிஷ்ணு உறங்கிக்கொண்டே கொட்டாவிவிட அப்போது பிர்ம்மா விஷ்ணுவின் வாயினுள் நுழைந்து வயிற்றுக்குள்ளே போய் சகல பூமிகளையும் கண்டு களித்தனன். பூலோகத்தை வெளியே கொண்டுவர திக்குத் திக்காக நோக்கி கடைசியாக விஷ்ணு நாபிக் கமலத்தில் வெளிப்படுத்தித் தானும் வந்தார். அப்போது விண்டுவின் கமலம் மத்தியில் சிக்க அவரும் கமலாசனமாக அவ்விடத் தமர்ந்தான். பு. ஆ. 11

| | | | |
|---|---|---|---|
| 1 | கிரேதாயுகம் | 1728000—4800 | 12000 × 360 = 4320000 |
| 2 | திரேதாயுகம் | 1296000—3600 | |
| 3 | துவாபரயுகம் | 864000—2400 | |
| 4 | கலியுகம் | 432000—1200 | |

மனுநூற்படி 1000 சதுர் யுகங்கள். 14 மன்வந்திரங்களாகவும் 15 சந்திகளாகவும் பிரிக்கப்பட்டது. ஒரு மன்வந்திரம் 71 சதுர் யுகங்கள். வேத சுருதிப்படி 7-வது மன்வந்திரத்தில் 58-வது கலியுகம் நடக்கிறதாகக் கூறப்படுகிறது.

லோகம் 14 = பூலோகம் 1, புவர்லோகம் 2, சுவர் லோகம் 3, மஹாலோகம் 4, ஜனலோகம் 5, தவலோகம் 6, சத்திய லோகம் 7.

அதலம் 1, விதலம் 2, சுதலம் 3, தாாதலம் 4, ரஸா தலம் 5, மகாதலம் 6, பாதாளம் 7.

4 வகை ஸ்தாவர சங்கமங்கள் = சுவேதஜம் 1, அண்டஜம் 2, உற்பிஜம் 3, ஜராயுஜம் 4, நவ பிர்மாக்கள் 14,

மனுக்கள் சூரிய சந்திரர் இந்திர முதலானவர்களை உண்டாக்கினர்.

அஷ்டதிக்குப் பாலகர்= இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாய்வு, குபேரன், ஈசானன். முறையே யானை மேஷம், மகிஷம், மனுஷ்யம், மகரம், மிருகம், துரகம், விருஷபம்.

## 4. பிர்ம்மன் லீலை

(பிர்மாண்ட புராணத்தில் பத்மை நிமித்யும் ஏற்பட்ட கதை) பார்வதி விவாகத்தில் பிர்ம்மா புரோகிதன். விவாக ஓமம் செய்தான். பார்வதி ஓம குண்டத்தை பிரதக்ஷணம் வருகையில் இடது கையினல் முந்தாணியைத் தூக்கிப் பிடித்து வருகையில் அவளுடைய துடையழகைக் கண்டு பிர்ம்மா மோகித்து இந்திரியம் ஸ்கலிதமாயிற்று. அதை ஓம குண்டத்தைச் சுற்றியிருக்கும் கலசத்தில் விட அதில் அகஸ்தியர் பிறந்தார்.

மறுபடியும் துடையைப்பார்த்து இந்திரியம் ஸ்கலிதமாயிற்று. அதை விருக்ஷபச்சை முதலிய அனேக செடிகளில் விட வால்கில்லியாதி முதலிய அநேக ரிஷிகள் பிறந்தார்கள். அவ்விடம் விட்டுப்போகும்போது ஒரு சுடலைச் சாம்பலில் இந்திரியத்தைவிட அதில் பூரிச்சிரவனென்கிற இராக்ஷஸன் பிறந்தான். அவ்விடத்திலுள்ள எலும்புகளைப் பொறுக்கி ஒன்ருய்ச் சேர்த்து அதிலே இந்திரியத்தைவிட சல்லியன் என்ற பராக்கிரமசாலி பிறந்தான். அவ்விடம் விட்டுப் போகையில், சிறிது இந்திரியம் ஸ்கலிதமாகி கீழே விழ அதை ஒரு பக்ஷி புசித்து அதன் வயிற்றில் சகுனி பிறந்தான். பிறகு தடாகத்தில் கொஞ்சம்விட அதை மண்டூகம் புசித்து அதன் வயிற்றில் மண்டோதரி யென்கிற பெண் பிறந்தாள். மிகுந்த இந்திரியத்தை அக்குளத்தின் தாமரைப்

பூமியில்விட அதிலே பத்மை என்கிற புத்திரி பிறந்தாள். அந்த பத்மையைச்சேர பிர்ம்மன்கேள்க அவள் சம்மதிக்காது அவளுக்கு வேதவாக்கியத்தைச் சொல்லுகிறார் பிர்ம்மா.

மாதரமுபைத்ய, சுஸார முபைதி, புத்ரார்த்தீ,
சகாமார்த்திநா பத்திரலோகோ நாஸ்தித்,
ஸர்வம்பரவேர் விந்துஹம், தஸ்மாத் புத்ரார்த்தம்
மாத்ரம், ஸ்ரஞ்சாதி, ரோஹதி ;

புத்திரார்த்த நிமித்தம் தாய் தமக்கை மகள் பின்னையாரோடாயினும் கூடலாம் என்பதாம். சேர்ந்து கெர்ப்பவதியாகி திரும்ப இந்திரியத்தை சித்தனலிங்கத்தினால் உறிஞ்சினன். பின் காமவிகாரத்தினால் இந்திரன் உத்திரவுப்படி திலோத்தமை 4 திசையிலும் ஆடி பிர்ம்மாவுக்கு 4 தலையும் உயரப் பறந்து ஆடி 5 வது தலையும் ஆகி திலோத்தமையைத் துயர்ந்து போகையில் ஈஸ்வரன் ஒரு தலையை அறுத்து எறிந்தான். பின் காடுகளில் அலைந்து திரிகையில் ஒரு புதரிலிருந்த பெண் கரடியைக்கூடி அதன் வயிற்றில் ஜம்புவந்தன் என்ற கரடிமுகமோடு ஓர் புத்திரன் பிறந்தான்.

பின் ஊர்வசியென்ற வேசியிடத்தில் சில உடன்படிக்கை செய்து முன் பத்மையிடத்தில் ஆக்ருஷணஞ் செய்த அண்டத்திலுள்ள இந்திரியத்தை ஊர்வசி கெர்ப்பத்தில்விட அதில் வசிஷ்டன் பிறந்தான். அப்புத்திரனுக்கு தன் பதவியைக் கொடுத்து பிர்மா தபோ வனமடைந்தார். வசிஷ்டன் சகல சாஸ்திரங்களிலும் சகல தத்துவங்களிலும் சாமர்த்தியனாகி புகழோடு வாழ்ந்தான்.

வசிஷ்டர் = பாரி அருந்ததி; மகன் சத்தியமுனி. தான் பெற்ற 100 பிள்ளைகளுக்கு புத்திசொல்லி கேளாமல் நாயிறைச்சியைத் தின்று ஜீவிக்க சாபம்.

பிர்ம்மா இடத்தில் உபதேசம் பெற்று ராமருக்குச் சொன்னது ஞானவாசிட்டம்.

விஸ்வாமித்திரர் புத்திரர்கள் 100 பேரையும் வசிஷ்டருடன் சண்டைக்குப்போக (காமதேனுவுக்காக) எரித்து விட்டார்.

தவம் செய்திருக்கும்போது மாலினி என்ற சண்டாள ஸ்திரீயைக் கூடி அவள் கெர்ப்பத்தில் பராசர் பிறந்தார்.

பராசர்= மலையருகில் தவம் செய்து ஒருநாள் கங்கைக்கரை வந்து சேர்ந்து [illegible] வாணியின் புத்திரி மச்சகந்தி என்பவளைக் கண்டு மோகித்து அவள் வயிற்றில் வியாஸன் பிறந்தான்.

வியாஸன்= பிறந்தது ஜடை, கௌபீனத்தோடு கூடியவர். பிறந்தவுடன் பராசனைப் பிடித்துக்கொண்டு பிழைப்பருள்வாய் என்றீர், கேட்க, நீயும் என்னைப்போல் ரிஷியாக இரு என்றது.

மச்சகந்தி= வியாசரைப் பெற்றபின் சந்தனு மகாராஜனை மணந்து சித்திராங்கதன், சித்திரவீரியன் (ஆண்கள்) அம்பாலிகை, அம்பிகை (பெண்கள்) வியாசன் சகோதரர் முறை.

சந்தனு= மகாராஜன் மகன் சித்திரவீரியன் இறந்து போக ஷியான் பெண்சாதி பின் (தங்கை முன்) கைம்பெண் அம்பாலிகை, அம்பிகை இரண்டுபேர்களை வியாசன் (ஷியார்கள் குரு) கூடி திருதராட்டிரன், பாண்டு இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். வேலைக்காரியைச் சேர்ந்து வியாஸன் விதுரனைப் பெற்றான் என்று துவாபரயுகத்தில் நடந்ததாயும், வியாசரால் பாரதம் வடமொழியில் எழுதியதாயும் பாரதம் இதிகாசம் 5-ம் வேதம் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

பிர்ம்மன்= தான் சிருஷ்டித்த ஊர்வசியை கலைமான் உருக்கொண்டுகூடி ருசியசிங்கம் (கலைக்கொம்பர்) மான்வயிற்றில்பிறந்தது.பிர்ம்மன் திலோத்தமையை சோவிரட்டி அவள் இந்திரன் கோட்டையில் நுழைந்து கதவடைக்க காமத்தினின்று விந்து கீழேவிழ கலசமுனி பிறந்தார்.

பிருகுரிஷி சம்சாரம் நாகவல்லி= திரிமூர்த்திகளும் நாகவல்லி அழகுக்காக அவளிடத்தில் போக 3 பிள்ளைகளாகச் சபித்தாள். பிருகுரிஷி தாயைக் கொன்றான். பிருகுரிஷியார் வம்சம் ஜமதக்கினி பரசுராமன் வகையறு.

அத்திரிமாமுனி= ருத்திராக்ஷி மகன். பாரி அனசூசா. மகன் துர்வாசமுனி. மேற்படி அனசூசாயிடம் திரிமூர்த்திகளும் அமுதுபோடக்கேட்டு பின் நீ நிர்வாணமாக வந்தால் அந்தப் பிச்சையே போதுமென்றது. அனசூசா 3 பேர்களையும் பிள்ளைகளாகச் சபித்தது. —பு—ஆ—ச—36.

முன்சொன்ன மண்டோதரி இருக்க
பின் மண்டோதரிக்கு—சாஸ்திரம்.

மயனென்ற ஓர் தாசன் நித்திரையில் இந்திரியம் ஸ்கலிதமாகி, தடாகத்தில் கசக்கி மண்டுகம் புசிக்க அது பெண் குழந்தையாக திரும்ப ரிஷி வளர்த்து மண்டோதரி என்று பேரிட்டார். மற்றொருநாள் இந்திரியம் கௌபீனத்தில்பட அதைச் செடியில் காயப்போட ஷை மண்டோதரி ஷைகௌபீனத்தைக்கட்ட கெர்ப்பமாகி ரிஷி ஷை விபரம் அறிந்து கெர்ப்பத்தை 700வருஷம் பிறக்காமல் ஸ்தம்பித்துவைத்து இராவணேஸ்வரனுக்கு கல்யாணம் செய்து பிறந்தவன் இந்திரஜித்து. பு—ஆ—18—19-வது பக்கம்.

பிர்மா வானவர் மனுஸ்மிருதி சாஸ்திரத்தை உண்டுபண்ணி விதிப்படி பிருகுரிஷிக்கு முன்னம் ஓதுவித்தார்.

பிருகுரிஷியும் மரீசி முதலான ரிஷிகளுக்கு ஓதுவித்தார்.
—மனு—அ—1—சு—58.

பிர்மா என்னிடத்தினின்று நன்றாக ஓதியுணர்ந்த இந்த பிருகுமகாரிஷி உங்களுக்கு முழுதும் சொல்லுவார்.
—மனு—அ—1—சு—59.

மனுஸ்மிருதி (வர்ணாச்சிரம தர்மமாகிய வைதீக தர்மத்தை விளக்கி) பிருகுரிஷி மற்றுமுள்ள ரிஷிகளுக்குச் சொன்னார்.

பிருகுரிஷிக்கு மனைவியும் சுக்ராசாரியாருக்குத் தாயும்—ஒருபெண். இந்திரனே இல்லாமல் செய்யவேணு மென்று திரிந்தவளை விஷ்ணு கொன்றார். பிருகுரிஷி, தன் சம்சாரத்தை விஷ்ணு கொன்றதற்காக விஷ்ணுவை நீ மனிதனைப் பிறந்து மனைவியையிழந்து வருந்தும்படி சபித்தார்.

வால்மீகராமாயணம் உற்பத்திகாண்டம்-51-வது சருக்கம்.
கந்தபுராணம் உபதேசகாண்டம் 64-வது அத்தியாயம்.

பிருகுரிஷி வம்சத்தில் பிறந்த ஜமதக்கினி மாமுனி பாரி ரேணுகை. மகன் ராமன். வரம்வாங்க (பரசுராமன் அவதாரத்தைப் பார்க்க.) மகள் காதிராஜன் மனைவி (காதிராஜன் வம்சத்தில் பார்க்க.) ரேணுகை ஜலத்தில் கந்தருவன் ரூபம் கண்டு மோகிக்க மணல் குடமாகவில்லை. அதில் ஜலம் கொண்டுவர முடியவில்லை. ரேணுகையை அதற்காக வெட்ட மகன் பரசுராமனுக்கு சமதக்கினி சொல்ல அவ்விதம் வெட்டியது.

சமதக்கினி பரசுராமனை என்ன வேண்டுமென்று கேட்க அவன் தாயைக் கேட்க அவர் எழுப்பிக் கொடுத்தது. ராமன் தவம்செய்து விஷ்ணுவிடம் ஈஸ்வரனிடம் கோடாலியும் பரசும் பெற்று பரசுராமன், என்ற பட்டமும் வாங்கியது. பரசுராமன் தன்குரு பீஷ்மாச்சாரியை படுகளத்தில் அடித்தான்.

இரேதாயுகம், கேகயதேசத்தை ஆண்ட (மாகிஷ்மதி நகரத்தை ஆளுகிற) கிருதவீரியன் பட்டமகிஷியின் கர்ப்பத்தில் 1000 கைகளோடு பிறந்தவன் கார்த்தவீரியார்ச்சுனன். கிருதவீரியன் தன் மகனுக்குப் பட்டம்கட்டி தபசுக்குப் போனான். கார்த்தவீரியார்ச்சுனன் சமதக்கினி வீட்டில் விருந்து சாப்பிட்டு காமதேனுவைக் கொண்டுபோனது.

பரசுராமன் 21-நாள் போர்புரிந்து காமதேனுவை மீட்டியது. கார்த்தவீரியார்ச்சுனன் மக்கள் பதிலுக்கு சமதக்கினி தலையை வெட்டியது. பரசுராமன், தன் தகப்பன் சமதக்கினி தலையை வெட்டியதற்காக 21 தடவை பூமியை வலம்வந்து சூரியகுல வம்சத்தினரை அதம்செய்தது.

பரசுராமன் தசரத ராமனிடம் வில்லைக்கொடுத்து புறங்காட்டிப் போனான். பரசுராமன் கசிபமுனிவர் சூரிய வம்சத்தைச்சேர்ந்தவன் பெண்வேடம் பூண்டு அயோத்தியை ஆண்டுகொண்டிருந்த கசிபருக்கு பூமி தானம்செய்து தபசுக்குப் போனான்.

நான்முகன் மகன் குசன். மனைவி வைதாபி. இவர்கள் குழந்தைகள் 4 பேர். குசாம்பன், குசநாபன், ஆத்தூர், தர்ஜஸ்வசு. வசு என்பவருடைய தேசம் மிதிலை. குசநாபர், காதி என்ற மகனையும் 100 பெண்களையும் பெற்றான். 100 பெண்களை வாய்வு பகவான் கல்யாணம் செய்யக்கேட்டு பெண்கள் இசையாதிருக்க வேகமாய் அடித்த காற்றினால் முடமாகிவிட்டார்கள். சோமதை என்ற கந்திருவப்பெண் சூலிமுனியை அடைந்து தன்னைக் கலந்து ஒரு பிள்ளை தரவேணுமென அப்படிப் பிறந்த பிரமதத்தன் 100 பெண்களையும் மணந்தான். அவன் அவர்களைத் தொட்டவுடன் அவர்கள் முடம் நீங்கிவிட்டது.

காதி என்ற மகனுக்கு சமதக்கினி மகள் பாரி. அவர்களுக்கு கௌசிகர், (விஸ்வாமித்திரர்,) மகள் கௌசிகா.

கௌசிகர் கங்கை நதியானுள். இந்த நதிக்கரையில் நானி ருக்கிறேன். இந்த யாகம் செய்யவே சித்தாச்சிரமம் வந்தேன். (கௌசிகமுனி ராமருக்குச் சொன்னது வால்மீகி ராமாயணம் 36-வது சருக்கம். குசன் விர்த்தாந்தத்தைப் பார்க்க.)

தாடகை சம்மாரத்துக்குப்பின் விஸ்வாமித்திரர் சொல்லுகிறுர் விஸ்வாமித்திரர் சாலே = (கௌசிகர்) பலிச்சக்கரவர்த்தியை வாமனன் அடக்கி திரும்புகாலேயில் தங்கின இடம் விஸ்வாமித்திரர் சாலே. இவர் தன் மகனுக்குப் பட்டம்கட்டி பிர்ம்ம ரிஷி பட்டம் வாங்க தபசு செய்தது. மேதடுகரையில் தபசு செய்யும்போது அயோத்தியை ஆண்டது அம்பரீஷன்.

விஸ்வாமித்திரர் தன் பிள்ளே 4பேரை ஆயிரம் வருஷம் நாயிறைச்சி தின்று ஜீவிக்க சாபமிட்டார்.

திரிசங்குராஜன் = அயோக்தியை ஆண்டவனுக்கு சுவர்க்கத்தை சிருஷ்டித்தது. விஸ்வாமித்திரர் ரிஷி. இ-ஆ-61 திரிசங்குராஜன் திரேதாயுகத்தில் குருவோடு எதிர்த்தான்.

காசியமுனிக்கு விபண்டகன் என்ற மகன். அவருக்கு ருஷியசிங்கம் (கலேக்கோட்டுமாமுனி) என்பவர் இருந்தார். அவர் அங்க தேசாதிபதியாகிய ரோமபர்த்தனிடம் இருக்கிறவரை தசரதமன்னர் மந்திரி சுமந்திரன் கூட்டிவந்து யாகம் செய்யச்சொல்ல, தசரதனே போய் அழைத்துவந்து அயோத்தியை யடுத்த சரயுநதி வடகரையில் அஸ்வமேத யாகம் செய்தது வால்மீகி ராமாயணத்தி லிருக்கிறது. கம்பராமாயணத்தில் ஷை யாகத்துக்குப்பின் புத்திர காமேஷ்டியாகமும் நடந்ததாக இருக்கிறது.

கௌதமரிஷி = காராவின் வயிற்றில் பிறந்தவர். கௌதமர் (புத்த ரிஷி. கௌதம முனி பாரி அகலிகை. மிதி

லைக்குப்பக்கத்தில் ஆச்சிரமம். இவர்கள் மகன் சதாநந்தன். ஜனகமகாராஜன் புரோகிதன் சதாநந்தன்.

அகலிகை பேஷ்டை காலத்தில் தெய்வேந்திரனைச் சேர்ந்ததால் முனி கல்லாகச் சபித்தார். ஜீ. கோ-39 தேவேந்திரனுக்கு விருஷணங்கள்(பீஜங்கள்) விழும்படிசாபம் 1000 யோனிகளாக முதலில் இருக்கும்படியும் பின் கண்ணாகவும் மாற்றியது. பூனையைப்போல் ஆச்சிரமத்தி லிருந்து போனதாய் கம்பராமாயணத்திலும், ரிஷியைப் போல் ஆச்சிரமத்திலிருந்து போனதாய் வால்மீகராமாயணத் திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அகலிகை சாப நிவார ணம். வால்மீக ராமாயணம் பாலகாண்டம் 49–50 சருக்கத் தில் 7-ம் அத்தியாயம்.

சதாநந்தன் = கல்லாயிருந்த தன் தாய் அகலிகை ராமர் பாதம்பட பெண்ணானதினால் தன் தாய் எழுப்பியதற்கு சந்தோஷம் கூறல்.

காசிபர் பாரி அநுசூதை என்ற பட்சியைச் சேர்ந்து 2 முட்டையிட்டு அடைகாத்ததாயும் ஒரு முட்டையில் பிறந் தது கெருடன். மற்றொன்றில் அவசரப்பட்டுப் பிட்டுப் பார்க்க குறைக்காலுடன் அருணன் பிறந்ததாயும் அருணன் சூரியனுக்கு ரதசாரதியாயிருப்பதாயும் கூறி யிருக்கிறது. ஜீ. கோ. பக்கம் 37

| | |
|---|---|
| வசிஷ்டர் = பிர்ம்மாமகன்<br>வசிஷ்டர் மகன் = சத்தியமுனி<br>வசிஷ்டர் மகன் = பராசர்<br>பராசர் மகன் = வியாசர்<br>வியாசர் மக்கள் = பாண்டுவகையறு | பிர்மன் லீலையில் விபரமாக விளக்கப் பட்டிருக்கிறது. |

கசியமுனி பாரி அதிதி. மகன், இந்திரன். பாரி சசிதேவி, இவர்கள் புத்திரன் ஜயந்தன். ஷை யார்கள் மகன் உபயிந் திரன் (வாமனவ்தாரம்) பார்க்க.

துவாபரயுகத்தில் வருணன் சாபத்தினால்:

கசியமுனிபாரி அதிதி, வாசுதேவர் பாரி தேவகி. இவர்கள் மகன் பிரகலாதன். நரசிம்ம அவதாரம் பார்க்க.

அத்திரிமாமுனி பாரி அனசூசா. மகன் துர்வாசமுனி, பரமேஸ்வர அம்ஸம். தெய்வேந்திரனுக்கு துர்வாசமா முனி சாபம் கொடுத்தது கூர்மா அவதாரத்தில் பார்க்க.

அத்திரி = சூத்திரக்ஷி மகன். கன்மத்தினால் பிராமணர் ஆனார். —ஜீ—கோ—105.

ஷை அனசூசாயிடம் திரிமூர்த்திகளும் அமுதுபோடக் கேட்டு பின் நீ நிர்வாணமாக வந்தால் அந்த பிச்சையே போதுமென்றது. அவர்கள் 3 பேர்களையும் பிள்ளையாகச் சபித்தது.

தேவகுரு (வியாழன்)பாரி தாரை. தாரை தன் புருஷனிடம் படிக்கவந்த சந்திரனுடைய அழகைக்கண்டு சேர்தல். புதன் என்ற கிரகம் பிறந்தது.

உலூகமுனி யென்பான் கங்கைக்கரையில் ஸ்நானஞ் செய்து இந்திரியம் ஸ்கலிதமானதை ஒரு தாமரை புஷ்பத்தில் பிழிய அயோத்தியா புராதிபதியான ரகுவின் புத்திரி சந்திரமதி, இந்திரியம் தங்கியிருந்த கமல புஷ்பத்தை புசிக்க அது கெர்ப்பமாக, தாய் தந்தையர்கள் கேட்டு புஷ்பத்தைச் சாப்பிட்ட விதம்கூறி பிறந்த பிள்ளையைக் காப்பாற்றியிருக்க, உலூகமுனி பிச்சைக்கு வந்தபோது தன் மகள் என்று உலூகமுனி உண்மையைத் தெரிவித்து அந்தப் பெண்ணை அந்தமுனி கல்யாணம் செய்துகொண்டார். —பு—ஆ—21.

அகஸ்தியர் அங்குஷ்ட பிரமாணமுள்ளவர். கலசத்தில் பிறந்தவர். பார்வதி கல்யாணத்தில் பிர்மா யாகம் வளர்க்கப் போயிருந்தபோது பார்வதி துடை தெரிய பிர்மா அந்த அழ

கைக்கண்டு மோகம் மிஞ்சி இந்திரியம் ஸ்கலிதமாக அதை ஒரு கலசத்தில்விட அகஸ்தியர் உற்பத்தி. —பு—ஆ—35.

ஓர் அரக்கன் சமுத்திரத்தில் ஒளிந்து கொண்டவனைக் கண்டுபிடிக்க சமுத்திரம் பூராவும் தன் உள்ளங்கையில் கிரகித்துச் சாப்பிட்டு விட்டதாகவும், —பு—ஆ—12.

கைலையில் நடந்த பரமசிவன் கல்யாணத்துக்கு அகஸ்தியர் முதலிய அநேகர்போக பூமிதாழ்ந்து தெற்கே உயர்ந்து விடவும், அகஸ்தியர் தன் திருவோட்டை தென்திசையில் எறிந்திட பூமி சமப்பட்டதாம். —ஜீ—கோ—35.

பரத்துவாசரிஷி ஆச்சிரமம் பிரயாகை நதிக்கரையிலிருக்கிறது. வால்மீகர் பரத்துவாசருக்கு 100000 கிரந்தம் சொன்னது. பரத்துவாசர் ஜீவன் முத்தியடைந்தது. ஞானவாசிட்டம் 410-வது பக்கம்.

வால்மீகரிஷி = வேடுவச்சி வயிற்றில் பிறந்தவர். பிர்ம்ம இந்திரியம் அவ்விடமிருந்த புற்றில் கொஞ்சம்விட வால்மீகரிஷி பிறந்தார். பு. ஆ. 36.

மாண்டவ்யர் = தவளை வயிற்றில் பிறந்தவர். மாண்டவ்வியனுடைய சகோதரி (டிண்டிகை) விதவை. மாண்டவ்வியன் மனைவியாகி இவர்களுக்கு ஒரு பெண் பிறந்தது.

பு—ஆ—33.

மதங்கர் = சக்கிலிச்சிக்குப் பிறந்தவர்.
அஸ்வத்தாமன் = குதிரை வயிற்றில் பிறந்தவர்.
ஜாங்கா = புலைச்சி வயிற்றில் பிறந்தவர்.
காங்கேயர் = கழுதை வயிற்றில் பிறந்தவர்.
ஜம்புகர், சௌனகர் = பைரவன் வயிற்றில் பிறந்தவர்.
ஜம்புவந்தர் = பிர்ம்மா பெண்கரடியைக் கூடிப்பிறந்தவர்.
நாரதர் = வண்ணான்வீட்டில் பிறந்தவர். —பு—ஆ—38.

சுகர்=கிளிமூக்கு, வியாசன் மகன்.

பப்பரவானன்=தந்தையை வதைத்தான்.

கபஸ்=வேசை மகன், கன்மத்தினால் பிராமணர் ஆனார். ஜீ. 105

பரதன்=ரிஷியாக இருந்தவன், மானுடன் சேர்க்கையால் கெட்டுப்போய்விட்டான்.

சூதமுனிவர்=புராண வியாக்கியானம் செய்வதில் வல்லவர்.

பூரிச்சிரவனன்=பிர்ம்மன் இந்திரியம், சுடலைச்சாம்பலில் விட பிறந்தவன்.

சல்லியன்=சுடலை எலும்புகளை ஒன்று சேர்த்து அதில் பிர்மன் இந்திரியம் விட பிறந்தவன்.

சகுனி=பிர்ம்மன் இந்திரியம் கீழேவிழ அதை ஒரு பக்ஷி சாப்பிட்டு அதன் வயிற்றில் பிறந்தவன்.

மண்டோதரி=பிர்ம்மன் இந்திரியம் ஒரு தடாகத்தில் கொஞ்சம் விட அதை மண்டூகம் புசித்து பிறந்தவள்.
பு—ஆ—சு—36.

வால்கில்லாதி முதலிய அநேக ரிஷிகள்=பிர்ம்மன் இந்திரியம் விருக்ஷபச்சை முதலியதுகளில் விட பிறந்தவர்கள்.

அஜீகர்த்தர் என்னும் ரிஷி, பசியினால் வருத்தப்பட்டு, தன் பிள்ளை சுனச்சேபன் என்பவனை நரமேத யாகத்துக்குக் கொடுத்து, அதற்குப்பதில் 100 பசு வாங்கிக் கொன்று யாகம் செய்து தனது பசியைத் தீர்த்துக்கொண்டான். அப்படிச் செய்தும் அவருக்கு பாவம்நேரிடவில்லை. மனு அ—10சு-105.

ரிஷிபிண்டம் ரத்தங்காது= மான், மரை, ஸ்திரீகளைக் கூடினவுடன் பிள்ளைகள் பெற்றதாயும், மந்திரசக்தியினாலும் வேள்வியினாலும் குழந்தைகளைச் சிருஷ்டித்ததாயும், உடம்பின் அழுக்கு, வியர்வை, கொட்டாவி, சுவாசம், தெர்ப்பை முதலியவைகளிலிருந்தும் குழந்தைகள் உற்பத்தி செய்ததா

யும், சிலர் தவளை வயிற்றிலும், கிளி வயிற்றிலும், மான் மரை, கழுதை வயிற்றிலும் மனிதனால் கெர்ப்பமுண்டாக்கிப் பிறந்தார்கள் என்றும் வெளியாகிறது. ஜீ-கோ-42.

## 5. ஸ்மிருதி உற்பத்தி

மனுசக்கிரவர்த்தி ஆண்டபாப்பிலேன் தேசத்திலிருந்து ஆரியர்கள், பாரசீகர்கள், யவர்னர்கள், பாப்பிலேனியர் வட இந்தியாவில் குடியேறியது சரித்திர காலத்தைப் பார்க்க.

ஆரியர்கள் பூசைத்தொழில், சைவபண்டாரம் என்ற பார்ப்பனரானார்கள். மற்ற ஆரியர்கள் கொள்வன், கொடுப்பன, உண்பன முதலியவற்றை நீக்கிவைத்தார்கள். தானே தெய்வமென்றும், தெய்வம் தன்வசமே யிருக்கிறதென்றும், தான் தெய்வத்தைத் தொடப் பாத்தியப்பட்டவ ரென்றும் சொல்லுகிறார்கள். கடாசி (Dead) இறக்கிறார்கள்.

ஆரியர்கள் = தேவர்கள், சுரர்கள் என்றும், ராக்ஷதர்கள், அசுரர்கள் என்றும், தமிழர்கள், வானரர்கள், நரர்கள் என்றும் கூறப்படுகிறது.

ஜென்மானுஜாயதே சூத்ரர்—கர்ம்மாணு ஜாயதே துவிஜகா வேதமாடந்து விப்ராணும், பிர்ம்ம ஞானந்து பிராமணு ப்ரஹ்மஜ்-ஞானிது ப்ராமண.

1. பிர்ம்மஞானியே பிராமணன்.
2. பிர்ம்மவேதம் உணர்ந்தவனே பிராமணன் ம. ம.பக்கம்5

பிர்ம்மன், அவயவங்களிலிருந்து 4 வகை மனிதர்களைப் பெற்றார். —ஜீ—கோ—37.

வியாசர் 4 ஜாதியாக வகுத்தார். ஜீ—கோ—38.

பிர்ம்மன் முகத்திலிருந்துபிராமணனும், நெஞ்சிலிருந்து க்ஷத்திரியனும், இடையிலிருந்து வைசியனும், காலிலிருந்து சூத்திரனும் உற்பத்தி. இ-ஆ-58.

புத்த நூற்களில் க்ஷத்திரியர்களின் வைப்பாட்டி பிள்ளைகள் பிராமணுள் என்றும் சொல்லியிருக்கிறதாம். —ம—ம—39.

யஜுர்வேதத்தில் மனிதர்களில்-196 பிரிவுகளிருக்கிறதாம். உலகம் பூரா தெய்வாதீனம். தெய்வம் மந்திராதீனமாயிருக்கும். மந்திரம் பிராமணாதீனமா யிருக்கும். பிராமணர்கள் எனக்கு தெய்வம் என்று கிருஷ்ணன் துவாபரயுகத்தில் சொன்னாராம். —நீ—ஸா—சு—65.

பிர்ம்மாவானவர் மனுஸ்மிருதி சாஸ்திரத்தை விதிப்படி பிருகுரிஷிக்கு முன்னம் ஓதுவித்தார். பிருகுரிஷியும் மரீசி முதலான ரிஷிகளுக்கு ஓதுவித்தார். —மனு—அத்—1—சு—58.

பிர்மா-என்னிடத்தினின்று நன்றாக ஓதியுணர்ந்த இந்த பிருகு மகாரிஷி உங்களுக்கு முழுதும் சொல்லுவார். —மனு அத்—1—சு—59.

மனுஸ்மிருதி (வர்ணாச்சிரம தர்மமாகிய வைதீகதர்மத்தை விளக்கி) பிருகுரிஷி மற்றுமுள்ள ரிஷிகளுக்குச் சொன்னார்.

மனுப்பிரஜாபதி= பாபிலோன் தேசத்தை அரசாண்டவர். பழமையான தேச ஒழுக்கம் குல ஒழுக்கம் இந்த சாஸ்திரத்தில் வரிசையாய்ச் சொல்லியிருக்கிறார். மனு-அத்-1-சு108.

பார்ப்பனர் மனு சாஸ்திரம் படிக்கலாம். மற்ற வருணத்தாருக்கு ஓதுவிக்கக்கூடாது. ம-அ-1-சு-103.

கருப்பாதானமுதல் ஸம்ஸ்காரம் வரையில் மந்திர பூர்வ கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கிறதோ அந்த துவிஜன் பிராமணன். இந்நூலை ஓத அதிகாரியாவான். மற்ற ஜாதியான் அதிகாரியன்று. ம-அ-2-சு-16.

தசரதன் குல முறையில் மனு ஓர் சக்கரவர்த்தி. மனுவால் சொல்லப்பட்டது ஸ்மிருதி.

சூரியகுலமுறை=பிரமன், மரீசி, காசிபன், சூரியன், மனு, இக்ஷுவாகு, குட்சி, விகுட்சி, பாணன், அநரண்யன், பிருது, திரிசங்கு, துந்துமாரன் (மாந்தாதா), சுசந்தி, துருவ

சந்தி, பரதன், அசிதன், சகரன், அசமஞ்சன், அஞ்சுமான், திலீபன், பகீரதன், காகுத்தன், ரகு (பிரவிருத்தன்—இவன் வசிட்டனால் சபிக்கப்பட்டு ராக்ஷஸனானவன்) சங்கணன், சுதர்சனன், அக்கினி வர்ணன், சீக்கிரன், மரு, பிரசுசருசன், அம்பரீடன், நகுடன், யயாதி, நாபாகன், அசன், தசரதன்.

இ-ஆ-69- சந்திரகுலமுறை ராமாவதாரத்தில் பார்க்க.

வேதம் ஓதும் எழுத்து, சுரம் இவைகள் பிரிந்து தோற்ருமல் ஓதக் கூடாது. சூத்திரன் அருகிலிருக்கும்போதும் ஓதக் கூடாது. மனு—அ—4 சு—99.

யாகம் செய்கிற பொருள் தேவர்கள் பொருள். யாகம் செய்யாதவர்கள் பொருள் அசுரர்கள் பொருள். அசுரர் பொருளை தேவபொருள் ஆக்குதல் தருமமே என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். மனு-அ—11—சு—20.

வேதம் (சுருதி) 1, தர்ம சாஸ்திரம் (ஸ்மிருதி) 2. இவ்விரண்டையும் தர்க்க யுக்தியைக்கொண்டு மறுப்பவன் நாஸ்திகனுவான். மனு-அ-2-சு-10.

நாஸ்திகன் வேதத்தை நிந்தித்தால் தெய்வத்தை நிந்தித்தவனுகிருன். நாஸ்திகனை நல்லோர்கள் புறக்கணிக்க வேண்டும். மனு-அ-2-சு-11.

கருப்பாதானம் மந்திரத்தாலும், சீமந்தம் ஓமத்தாலும், சாதகருமம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம் இவைகளினுலும் துவிஜர்களுக்கு (பிராமணர்களுக்கு) சம்போகம் செய்யக்கூடாத தினத்தில் உற்பத்தியான தோஷமும், மாதாவின் கருப்பத்தில் வசித்த தோஷமும் நீக்கப்படுகின்றன. மனு-அ-2-சு-27.

## 6. பிராமணன் மேலான தெய்வம்.

வைதீகமாயினும் லௌகீகமாயினும் (அக்கினி மேலான தெய்வமாகிறதோ) அதைப்போல், பிராமணன் ஞானியானுலும் மூடனுயினும்மேலான தெய்வம். மனு—அ. 9—சு—317.

அக்கினி பிணத்தை தஹித்தாலும் ஓமத்துக்கு எடுத்துக்கொள்கிறோம். பிராமணன் கெட்டகாரியத்தில் ஈடுபட்டிருந்தாலும் நற்காரியங்களுக்கு பூஜிக்கத் தக்கவன்; மேலானவர்கள். மனு.அ.–9–சு–318.

பிராமணன் சூத்திரத்தொழில்பார்த்தாலும்உயர்ந்தவன். இப்படி பிர்ம்மதேவன் நிச்சயம் செய்திருக்கிறார்.
மனு. அ.–10–சு–75.

தனமில்லாமல் வருந்துகிற பிராமணன் தகாதவனுக்கு ஓதுவித்து அவனிடம் தானம் வாங்கியதில் யாகம் செய்வித்தல் முதலிய காரியங்களைச் செய்தல் தோஷம் இல்லை. பிராமணர் நீர், நெருப்பு இதைப்போல் பரிசுத்தமுடையவர்.
மனு.அ.–10–சு-103.

பிராமணன் ஆபத்துக்காலத்தில் பிரதிலோம (சண்டாளன்) ஜாதியினுடைய அன்னத்தைச் சாப்பிட்டாலும் ஆகாயத்தில் எறிந்த சோற்றைப்போல் அவனிடத்தில் பாபம் ஒட்டாது. மனு. அ–10–சு–104.

## 7. பிராமணன்=வைதீக ஸ்மார்த்த தாந்திரிக மதம்

பிர்ம்மாவின் முகமாகிய உயர்ந்த இடத்தில் பிறந்ததினால் இந்த உலகத்தில் உண்டாயிருக்கிற சகல வருணத்தாருடைய பொருட்களையும் தானே தானம் வாங்கப் பிரபுவாகிறான்.
மனு-அ-1-சு-100.

சகல வருணத்தாருடைய தருமமென்னும்பொக்கிஷத்தை அரசன்போற் காப்பாற்றுகிறான். மனு-அ-1-சு-99.

யாசகம் வாங்கினாலும் தன்னுடைய பொருளேயாகும். மற்றவர்கள் அவர்கள் தயவினாலே அவற்றை அனுபவிக்கிறார்கள். மனு-அ-1-சு-101.

ஆத்ம லாபத்திற்கு பிரஜைகளை பிர்ம்மன் படைத்து பிராமணனிடத்திலும் ஒப்பித்தார். மனு-அ-9-சு-328.

கிருஷ்ணசாரம் மான் எந்தயிடத்திலிருக்கிறதோ அந்த இடம் யாகத்துக்குரிய பூமி. மற்ற இடம் மிலேச்ச தேசமெனப்படும். மனு-அ-2-சு-23.

ஷை யாகத்துக்குரிய பூமியை வேறு இடத்தில் பிறந்த துவிஜர்கள் (பிராமணர்கள்) வந்து அடையவேண்டியது. அல்லது வசிக்கவேண்டியது.

சூத்திரன் இராஜாங்கத்திலும், தர்மம் அறியாதவர்கள், பாஷாண்டிகள் இவர்கள் இருக்கிற கிராமத்திலும், சமீபத்தில் சண்டாளர் வசிக்கும் கிராமத்திலும் பிராமணன் வாசம் செய்யலாகாது. ம-அ-4-சு-61.

## 8. தானம்.

க்ஷத்திரிய வம்சத்தில் பிறவாத அரசன் 10000 கசாயிக்காரர்களுக்குச் சரியானதான கசாயிக்காரன். தானம் வாங்குவது மிகவும் கொடுமை. ம-அ-4-சு-86.

க்ஷத்திரிய வம்சத்தில் பிறவாதவனும், பேராசையுள்ளவனும், சாஸ்திரத்தைக் கடந்தவனும் உள்ளவர்களிடத்தில் தானம் வாங்குபவன் 21 நரகங்களையும் முறையே அடைகிறான்.

திலமர்த்தனம் செய்பவன் (எள்ளாட்டுபவன்) 10 கசாயிக்காரர்களுக்கு ஒப்பாவான். கள் விற்பவன் 100 கசாயிக்காரர்களுக்கு ஒப்பாவான். வேசைத் தொழில் செய்பவன் 1000 க்சாயிக்காரர்களுக்கு ஒப்பாவான். இவர்களிடத்தில் தானம் வாங்கக் கூடாது. ம-அ-4-சு-84-85.

வயலிலும் மற்ற இடங்களிலும் சிந்தின நெற்களை 2 விரற்களால் பொறுக்குவது ருதம்.
ஷை ஷை கதிர் நெல்லைப் பொறுக்குவது ,,
தான் கேட்காமல் வருவது அமிர்தம்
கேட்டபின் கிடைப்பது மிர்தம்
பயிரிடுவது ப்ரமிர்தம்

சத்தியான்ம்ருதம் சுனகன் (நாய்) விருத்தி (தொழில்) யினால் ஆபத்தில்லாதபோது ஜீவிக்கக்கூடாது.
ம-அ-4-சு-45-46.

பிர்ம்மன் இவ்வுலகம் முழுவதும் ஜீவனுக்காகாரமாக உண்டுபண்ணினார். நெல் முதலிய தாவரமும், மிருக முதலிய ஜங்கமும் ஜீவனுக்கு ஆகாரமாகவே யிருக்கின்றன.
ம-அ-5-சு-28.

கர்ப்பூரம் முதலிய வாசனைச் சாமான்கள் படுக்கை, வீடு, தருப்பை, புல், ஜலம், புஷ்பம், பொன், தயிர், அவல், அரிசி, மீன், பால், மாமிசம், கறியமுது இவைகள் வலுவில் வந்தால் நீக்கக்கூடாது. ம-அ-4-சு-250.

## 9. மாமிசம் புசித்தல் - எக்யம்

பிராமணன் தன்னை மாமிசம் புசிக்கவேணுமென்று கேட்டுக்கொள்ளும்போதும், விதிப்படி சிரார்த்தத்தில் வரிக்கப்பட்டபோதும், வேறே ஆகாரமில்லாமல் உயிர்போகும்படி நேரிட்ட சமயத்திலும் மாமிசத்தைப் புசிக்கலாம்.
மனு. அ. 5-சு-27.

உயிருக்கு ஆபத்து நேருங்கால் புசிக்கத்தக்க பிராணிகளை நாள்தோறும் புசித்தாலும் தோஷமடைய மாட்டான்.
மனு. அ. 5-சு-30.

யாகம்செய்து மிகுந்த மாமிசத்தைப் புசித்தல் தேவகாரியம். தனக்கென்று கொன்று தின்னல் ராக்ஷசகாரியம்.
மனு-அ. 5-சு-31.

மாமிசம் கிரயத்துக்கு வாங்கினாலும், தானாகவே சம்பாதித்தாலும், ஒருவன் இஷ்டமாகக் கொடுத்தாலும் அவைகளை தேவர்களுக்கும், பிதிர்களுக்கும் நிவேதித்து புசித்தவன் தூஷிக்கப்படமாட்டான். மனு. அ. 5-சு-32.

எக்கியத்திற்காகவே பசுக்கள் பிர்ம்மனால் படைக்கப்பட்டது. எக்கியத்தின் உயிர்க்கொலை கொலையாக மாட்டாது. எக்கியம் உலகமெல்லாம் க்ஷேமத்தை யடைகின்றது.
ம-அ-5-சு-39.

எக்கியத்திற்காக உபயோகிக்கும் கொடிகள், பசுக்கள், விருக்ஷங்கள், மிருகங்கள், பக்ஷிகள் அவை உயர்ந்த கதியை அடைகின்றன. மனு. அ. 5-சு 40.

மதுபர்க்கம் (மாட்டிறைச்சி நெய் பாலில் வெந்து தேன் கலந்து செய்யும் உண்டை அல்லது சிற்றுண்டி) எக்கியம் சிரார்த்தம் இவைகளுக்கு உயிர்க்கொலை செய்யலாம். மனு. அ. 5-சு-41.

சராசரத்தில் வேதத்தில் சொல்லப்பட்ட இம்சை, ஹிம்சை என்று நினைக்கக்கூடாது. வேதத்தினின்று தருமம் விளங்குகிறது. வேதம் ஹிம்சை சொன்னாலும் புண்ணியமாகவே யிருக்கும். மனு. அ. 5-சு-44.

வடைமுதலிய பலகாரங்கள், பாயசம், கிழங்குகள் உருசியுள்ள இறைச்சி, நறுமணமுள்ள நீர் இவைகள் பிராமணருக்குரியன. மனு. அ. 3-சு-227.

செந்நெல்லின் சோறு, பசுவின்பால், சோமலதையின் சாறு (சோமலதை = ஆட்டாங்கொடி) தீ நாற்றமில்லாத இறைச்சி, கல்லுப்பு இவைகள் ஓமத்துக்குரியவை. மனு. அ. 3-சு-257.

## 10. சிரார்த்தம் - பிதுர்திருப்தி

| | | | பிதுர்திருப்தி காலம். | | மனுஸ்மிருதி. |
|---|---|---|---|---|---|
| எள்ளு, செந்நெல்லரிசி, உளுந்து, ஜலம், கிழங்கு | | | | | |
| இவைகளின் சிரார்த்தம் செய்தல் | | | 1 | மாதம் | அ.3-சு-267. |
| ஆமை, மச்சம், மீன் இறைச்சி | ,, | ,, | 2 | ,, | அ.3-சு-268. |
| மானின் | ,, | ,, | 3 | ,, | ,, |
| செம்மறி ஆட்டின் | ,, | ,, | 4 | ,, | ,, |
| பறவைகளின் | ,, | ,, | 5 | ,, | ,, |
| வெள்ளாட்டின் | ,, | ,, | 6 | ,, | அ.3-சு-269. |
| புள்ளிமான் | ,, | ,, | 7 | ,, | ,, |
| கவரிமான் | ,, | ,, | 8 | ,, | ,, |

| | | | பிதுர்திருப்தி காலம் | மனுஸ்மிருதி |
|---|---|---|---|---|
| கலைமான் | ,, | ,, | ,, 9 ,, | ,, |
| முள்ளம் பன்றி காட்டெருமைக்கிடா | ,, | ,, | ,, 10 ,, | அ-3-சு-270. |
| முயல் ஆமை | ,, | ,, | ,, 11 ,, | ,, |
| பசுவின் பால், தயிர், நெய் | ,, | | ,, 1வருஷம் | அ 3-சு-271. |
| வார்த்தீஷன் (கிழ வெள்ளாடு தண்ணீர் குடிக்கும்போது 2 காதுகளும்தண்ணீரில் படும்)மாமிசம் | ,, | | ,, 12வருஷம் | ,, |
| கறியமுது, முள்ளுள்ள வாளைமீன், கட்கமிருகம், சிவந்தஆடு(செம்மறிஆடு) இவைகளின் மாமிசமும், காட்டில் முளைத்திருக்கும் செங்நெல் அரிசியும். | ,, | | ,, அளவற்ற காலம் | ,, |

சிரார்த்தத்தில் விதிப்படி வரிக்கப்பட்ட பிராமணன் மாமிசத்தை தோஷமென்று புசியாவிட்டால், அவன் 21 ஜனனம் பசுவாகப் பிறப்பான். மனு. 5-சு-35.

பிராமணர் அக்கினிசொரூபர். பிரம்மச்சாரி, கிரஹஸ்தன் சிரார்த்தம் செய்தால் வரிக்கப்பட்ட பிராமணன் கையில் அன்னத்தைச் சமர்ப்பிக்கவேண்டும். மனு. அ. 3-சு-212.

நொண்டி, ஒற்றைக்கண்ணன், சிரார்த்தம் செய்வோரின் வேலைக்காரன், சூத்திரன், 4 விரல், 6 விரல் உள்ளவர்கள் சிரார்த்தம் செய்கிற வீட்டில் இருக்கக்கூடாது. வடநாட்டில் சந்நியாசியையும் சேர்க்கிறதில்லை. மனு. அ. 3-சு-242.

இறந்துபோன மாதா பிதாக்களுக்கு மாளயபக்ஷ அமாவாசை மற்ற வருஷ திதி இவ்விடத்தில் குமாரன் கள்ளினாலும், மாமிசத்தினாலும், பால் சோற்றினாலும், நெய் சோற்றினாலும், வஸ்திரங்களினாலும் சந்தோஷிக்கச் செய்தால்,

இறந்து சாம்பலான பிதுருக்கள் திருப்தி யடைகிறார்கள் என்பது. பு-ஆ-28.

## 11. தவம்

பிராமணனுக்கு வேத வேதாங்கங்களை ஓதி உணரும் ஞானமும், க்ஷத்திரியனுக்கு இந்நூலிற் சொன்னபடி அரசியல் நடத்தும் ஞானமும், வைசியனுக்குப் பயிர் வர்த்தகம் இவைகளைக் குறித்த ஞானமும், சூத்திரனுக்குப் பிராமணப் பணிவிடையும் தவமாம். மனு-அ-11-சு-235.

உலண்டுப்பூச்சி, பாம்பு, விட்டிற்பூச்சி, பசுக்கள், பறவைகள் முதலியன தவத்தால் சொர்க்கத்தை யடைகின்றன. ம-அ-11-சு-240.

யானை, குதிரை, சூத்திரர், பழிக்கத்தக்க மிலேச்சர், சிம்மம், புலி, பன்றி இவ்விதமாகப் பிறப்பது தமோகுணத்தின் மத்திமகதி. ம-அ-12-சு-43.

வேதம் ஓதாமலும், பிள்ளை பெறாமலும், யாகம் செய்யாமலும் மோக்ஷத்துக்கு முயற்சி செய்கிறவன் நரகத்தை யடைவான். ம-அ-6-சு-36-37.

கர்மப்ரஷ்டனான க்ஷத்திரியன், மலம், பிணம் இவைகளைத் தின்னும் கடபூதமாகப் (பேய்) பிறக்கிறான். ம-அ-12-சு-71

கர்மப்ரஷ்டனான வைசியன் சவர்ணரைச் சாப்பிடுகிற மைத்ராக்ஷஜ்யோதிகன் என்னும் பேயாகப் பிறக்கிறான்.

வேதஸ்மிருதிகளுக்கு விரோதமாக நடக்கும் சூத்திரன் சீலப்பேனைத் தின்னும் பேயாகவும் பிறக்கிறான். ம-அ-12-சு-72.

## 12. சந்நியாசம்

எக்ஞத்தால் தேவர்களுடையவும், பிள்ளை பேற்றால் பிதுர்க்களுடையவும், வேதம் ஓதுவதால் இருஷிகளுடையவும் கடனைத் தீர்த்து ஜோதிஸ்டோமம் (யாகம்) சத்திக்குத் தக்க

படி செய்து மோக்ஷத்துக்கு உபயோகமான சந்நியாசத்தில் மனம் வைக்கவேண்டியது. ம-அ-6-சு-36.

எஜுர் வேதத்தில் சொல்லிய எல்லாப் பொருள்களையும் தக்ஷிணையாக பிரஜாபத்தியஇஷ்டியை (யாகத்தை) அக்கினியை ஆத்மசமாரோபணம் செய்துகொண்டு கிரகஸ்தாசிரமத்திலிருந்தே சந்நியாசம் செய்துகொள்ளவும்.
ம-அ-6-சு-38.

சந்நியாசி பரிசுத்தமான கமண்டலம், தண்டம், பௌத்திரம் எடுத்துக்கொண்டு ஒருவரால் கொடுக்கப்பட்டாலும், விஷய போகங்களில் விருப்பமில்லாமல் மௌனவிருதத்தோடு இருக்கவேண்டும். ம-அ-6-சு-41.

அக்கினியில் யாகம் செய்தவனையும், வீடு இல்லாதவனையும், நாள்தோறும் பிச்சைக்கு கிராமத்தில் பிரவேசிக்கவேணும். ஒரு பொருளிலும் விருப்பமில்லாதவனையும், ரோக நிவர்த்திக்கு ஔஷதஞ் சாப்பிடாதவனையும், ஸ்திபுத்தி ப்ரம்ம சிந்தனை யுடையவனையும், இரவும் பகலும் காட்டில் ஏகாந்தமாய் வசிக்கவேண்டும். ம-அ-6-சு-43.

மண்பாத்திரம் வைத்துக்கொள்ளுதல், மரத்தினடியில் வசித்தல், கந்தைத் துணி கட்டிக்கொள்ளல், ஏகாங்கியாயிருத்தல், சத்துரு மித்துருவென்பதின்றி யாவரையும் சமமாய்ப் பார்த்தல். இவை எல்லாம் மோக்ஷத்தை விரும்பினவன் அடையாளம். ம-அ-6-சு-44.

## 13. சூத்திரன் 7 வகை.

யுத்தத்தில் புறங்காட்டியோடுபவன் 1, யுத்தத்தில் கைதியாகப் பிடிக்கப்பட்டவன் 2, பிராமணனிடத்தில் பக்தியினால் ஊழியஞ் செய்கிறவன் 3, விபசாரி மகன் 4, விலைக்கு வாங்கப்பட்டவன் 5, ஒருவனால் கொடுக்கப்பட்டவன் 6, தலைமுறை தலைமுறையாக ஊழியம் செய்கிறவன் 7.
ம-அ-8-சு-415.

பிராமணர்களை வழிபடாததினாலும், உபநயனம் முதலிய சடங்குகள் செய்துகொள்ளாததினாலும், க்ஷத்திரியர் வரவர சூத்திரத் தன்மை யடைந்தார்கள். ம-அ-10-சு-43.

மௌண்டாம், ஔண்டாம், திராவிடம், காம்போஜம், யவனம், சகம், பாரதம், பால்ஹீகம், சீனம், சிராதம், தரதம், கசம் இத்தேசங்களை யாண்டவர்கள் சூத்திராராகிவிட்டார்கள். ம-அ-10-சு-44.

அத்-10-சு 45-முதல் 73வரை இம்மாதிரியேகூறியிருக்கிறது.

பிராமணன் உண்டுமிகுந்த உணவு (எச்சல்) உடுத்திக் கிழிந்த ஆடை, சாரமற்ற தானியம் (பதர்) இவைகளை பிராமணன் சூத்திரன் ஜீவனத்திற்குக் கொடுக்கவேண்டும்.

ம-அ-10-சு-125.

பிராமணனால் சூத்திர ஸ்திரீயிடத்தில் பிள்ளைபிறந்தால் அவனுக்குத் தந்தையின் சொத்து பாத்தியமில்லை.

ம-அ-9-சு-155.

பிராமணனுக்கு சூத்திரன் மனைவியிடத்தில் பிறந்த புத்திரன் கௌத்திரன் என்று பேர். (பாரச புத்திரன்) அவன் செய்யும் சிரார்த்தம் பரலோகத்துக்கு உபயோகமாகாது. உயிரோடிருந்தாலும் பிணத்துக்கொப்பாவான்.

## 14. சூத்திரனுக்குத் தொழில்

சூத்திரன் இம்மையில் உயிர் வாழ்க்கைக்கும் மறுமையில் பயனுக்காகவும் பிராமணனையே தொழவேண்டும்.

ம-அ-10-சு-122.

சூத்திரன் இம்மையிலும் மறுமையிலும் பிராமணப் பணிவிடை ஒன்றே பயன் தருவதாம். ம-அ-9-சு-334.

சூத்திரன் மனோ வாக்குக்காயங்களினால் பிராமணனுக்குத் தொண்டு செய்க. பிராமணன் இல்லையானால் க்ஷத்திரியனுக்குத் தொண்டுசெய்க. க்ஷத்திரியன் இல்லையானால் வைசியனுக்குத் தொண்டு செய்க. ம-அ-9-சு-335.

சூத்திரனை மற்ற 3 வருணத்தாருக்குப் பணிவிடை செய்ய அரசன் சொல்லவேண்டியது. அப்படிச் செய்யா விட்டால் உலகம் அழிந்துவிடுமாதலால் தண்டித்து அங்ஙனம் செய்யவேண்டியது. ம-அ-8-சு-410.

சூத்திரனை கூலிகொடுத்தோ கொடாமலோ பிராமணன் வேலை வாங்கலாம். பிராமணனுக்குத் தொண்டு செய்யவே சூத்திரனை பிர்ம்மா படைக்கப்பட்டிருக்கிறார். ம-அ-8சு-413.

சூத்திரன் பிராமணனுக்கு அடிமைத்தனத்திலிருந்து நீங்கியிருந்தாலும் அடிமைத்தனம் நீங்காது. சூத்திரன் பிறக்கும்போதே கூடப்பிறந்தது. மறுமைக்காகவும் தொண்டு செய்யவேண்டும். ம-அ-8-சு-414.

சூத்திரனுக்குப் பிராமணப் பணிவிடையும் தவமாகும். ம-அ-11-சு-235.

## 15. சூத்திரனுக்கு விரத முதலியதுகளை சொல்லக்கூடாது. சூத்திரன் தொடுவதால் உணவுப்பொருள் அசுத்தமாகிறது.

இம்மைப் பயனளிக்கிற அர்த்த சாஸ்திரத்தைச்சொல்லி வைக்கலாகாது. தன் சிஷ்யனாக சூத்திரனுக்கு உச்சிட்ட அன்னத்தைக் கொடுக்கலாகாது. ஓமம் பண்ணிய சேஷத்தையும் சூத்திரனுக்குக் கொடுக்கலாகாது. தருமம் விரதம் இவைகளையும் நேராய் அவனுக்குச் சொல்லலாகாது. மனு. அ. 4-சு-80.

பன்றி முகருவதிலும், கோழியின் சிறகுக்காற்று படுவதிலும், நாய்பார்த்தலினாலும், சூத்திரன் தொடுவதினாலும், பதார்த்தம் (உணவுப்பொருள்) அசுத்தமாகிறது. மனு. அ. 3-சு-251.

| தீட்டு. | தீட்டு நீங்குதல். | பிணம்கொண்டு போதல் திசை. | பெயரிட வேண்டியது |
|---|---|---|---|
| பிராமணன் 10-நாள் | ஸ்நானம் | கிழக்கு | சர்ம்மா |
| க்ஷத்திரியன் 12-நாள் | வாகனம்வில் தொடுதல். | வடக்கு | வர்ம்மா |

| | தீட்டு | தீட்டு நீங்குதல். | பிணம்கொண்டு போதல் திசை. | பெயரிட வேண்டியது |
|---|---|---|---|---|
| வைசியன் | 15-நாள் | கலப்பை, தராசு கயிறு தொடுதல் | மேற்கு | பூதி |
| சூத்திரன் | 30-நாள் | தடியைத்தொடுதல் | தெற்கு | தாஸன் |

மனு.அ.5-சு-83, மனு.அ.5-சு-99, மனு.அ 5-சு-92, மனு.அ.2-சு-32

பிராமணனுக்கு மங்களத்தையும், க்ஷத்திரியனுக்குப் பலத்தையும், வைசியனுக்குப் பொருளையும், சூத்திரனுக்குத் தாழ்வைக் காட்டுகிற பெயரையும் இடவேண்டும்.

மனு. அ. 2—சு—31.

எந்த பிராமணன் சூத்திரனுக்குநேராக தருமத்தையும் விரதத்தையும் உபதேசிக்கிருனோ அவன், சூத்திரனோடுகூட அஸம்வ்ருத (ஓர்வித நரகம்) என்னும் இருளில் மூழ்கிருன்.

மனு. அ. 4—சு—81.

## 16. சூத்திரனுக்குத் தண்டனை

சூத்திரன் பிராமணர்களைத் திட்டினால் அவன் தாழ்ந்த இடத்திலிருந்து (காலில் பிறந்தவனுகையால்) நாக்கை அறுக்கவேண்டும்.

ம-அ-8-சு-270.

சூத்திரன், பிராமணன் பெயர், ஜாதி இவைகளைச் சொல்லித் திட்டினல் அவன் வாயில் 10 அங்குல நீளமுள்ள இரும்புக் கம்பியைக் காய்ச்சி எரிய எரியவைக்கவேண்டும்.

—ம—அ—8—சு—271.

சூத்திரன் பிராமணனைப் பார்த்து நீர் இதைச்செய்ய வேண்டும் என்று தரும உபதேசம் செய்தால் அவன் வாயிலும் காதிலும் எண்ணெயைக் காய்ச்சி ஊற்றவேண்டும்.

மனு-அ-8-சு-272.

சூத்திரன் பிராமணனுடைய தலைமயிர், தாடி, மீசை, கால், கழுத்து, ஆண்குறி இவைகளைப் பிடித்த கைகளை யோசிக்காமல் அறுக்க வேண்டும். மனு. அ. 8-சு-283.

சூத்திரன் பிராமணனுடன் ஒரு ஆசனத்தில் உட்கார்ந்தால் இடுப்பில் சூடுபோடவேணும். அல்லது ஆசன பக்கத்

தில் கொஞ்சம் அறுத்தாவது அல்லது ஊரைவிட்டுத் துரத்தவேண்டும். மனு-அ-8-சு-281.

சூத்திரன் துவிஜஜாதிகளின் (ஆரியர்கள்) எந்தெந்த தானத்தை கையினாலும், தடியினாலும் தாக்குகிறானோ அந்தந்த உறுப்புகளை நறுக்கவேணும். அடித்தால் கையையும் உதைத்தால் காலையும் வெட்டிவிடவேண்டும்.
மனு-அ-8-சு-279 – 280.

சூத்திரனும், வைசியனும் ஒருவருக்கொருவர் திட்டிக்கொண்டால் சூத்திரனுக்கு அபராதம் பணம் 500. வைசியனுக்கு அபராதம் பணம் 250. மனு-அ-8-சு-277.

சூத்திரன் பிராமண சாதிக்குறியை பூணூல் முதலியதைத் தரித்தால், அரசன் சூத்திர அங்கங்களை வெட்டிவிடவேண்டும். மனு-அ-9-சு-224.

சூத்திரன் பிராமணர்பொருளை அபகரித்தால், சித்திரவதைசெய்து கொல்லுக. மனு-அ-9-சு-248.

சூத்திரன் பிராமணனுடைய தொழிலைச் செய்தாலும் பிராமணனாகமாட்டான். பிராமணத் தொழில் பார்க்க அதிகாரமில்லை. ம-அ-10-சு-75.

பிராம்மனனல்லாதான் பொருளாசையால் உயர்குலத்தோனுடைய தொழிலைச் செய்தால் அவன் பொருள் முழுதும் பறித்துக்கொண்டு அரசன் அவனைத் துரத்திவிடவேண்டும். ம-அ-10-சு-96.

## 17. சண்டாளன் பிறவி விபரம்

விராத்தியப் பிராமணனுக்கு அவ்வித ஸ்திரீயிடத்தில் பாவியான பூர்ஜகண்டன் பிறக்கிறான். அவனுக்கு ஆவந்தியன், வாடதானன், புஸ்பதன், சைகன் என அந்தந்த தேசங்களில் பெயர் உண்டு. ம-அ-10-சு21.

விராத்திய க்ஷத்திரியனுக்கு வைஸ்திரீயிடத்தில் பாவியான சல்லன் பிறக்கிறான். அவனுக்கு மல்லன், நிச்சவி,

டன், கசன், திராவிடன் என்று பெயர். பிராமணனின் மதப்படிக்கு திராவிடன் (பாவி) பரம்பரையில் பிறந்தவன். பாவி என்ற பொருள்.

சூத்திரன் பிராமணப் பெண்ணைச் சேர்ந்து பிறந்த பிள்ளை சண்டாளன். அச்சண்டாளன் மற்ற 4 வருணப் பெண்ணைக்கூடிப் பிறந்தவர்கள் அவனைக்காட்டிலும் தாழ்ந்த ஜாதி மக்கள் உண்டாவார்கள். ம-அ-10-சு-30.

## 18. விபசார தண்டனை

பிராமணரல்லாதார் மற்ற 3 வர்ணத்தாரின் மனைவியைக்கூடினால் அவன் உயிர்போகும் வரை தண்டிக்க வேண்டும். ம-அ-8-சு-359.

உயர்குலப் பெண்ணைக் கூடிய இழிகுலத்தோனை சாகும் வரை தண்டிக்க. ம-அ-8-சு-366.

சூத்திரன் காவலில்லாத (இஷ்டம்போல் திரிகிற) பிராமணப் பெண்ணைக் கூடினால், பீஜம், ஆண்குறியை அறுக்கவேண்டும்.

காக்கப்பட்ட பிராமணப் பெண்ணைக்கூடினால் உடல் முழுதும் துண்டு துண்டாய் வெட்டி அவனுடைய பொருளையும் கொள்ளையிடவேண்டும். ம-அ-8-சு-374.

4 வருணத்தாருக்கும் பொருள், புத்திரனைப் பார்க்கிலும் விபசார தோஷமின்றி காப்பதே மேலான தர்மம். ம-அ-8-சு-359.

சூத்திரன், அரசன் செய்யவேண்டியதை (விசாரணையை) செய்கிறானோ அந்த தேசம் சேற்றிலகப்பட்ட பசுவைப்போல் பார்த்துக்கொண்டிருக்கும்போதே துன்பத்தில் ஆழ்ந்து விடுவார்கள். ம-அ-8-சு-21.

சூத்திரர், தெய்வநிந்தனை செய்வோர் இவர்கள் நிறைந்தும் பிராமணர்கள் இல்லாமலுமிருக்கிற தேசம் வறுமை, பிணி இவைகளால் துன்புறுத்தப்பட்டு சீக்கிரத்தில் அழிந்துபோய்விடும். ம-அ-8-சு-22.

## 19. விசாரணைகாலத்தில் கேட்கவேண்டியது

பிராமணனை சத்தியமாகச் சொல் என்றும், க்ஷத்திரியனை உன் வாகனம் ஆயுதம் இவைகளின்மேல் ஆணையிட்டுச் சொல் என்றும், வைசியனை பசு, தானியம் இவைகளின்மேல் ஆணையிட்டுச் சொல் என்றும், சூத்திரனை நான் பொய் சொன்னால் பஞ்சமா பாதகங்களை அடையக்கடவனென்றும் சொல்லச் சொல்லி கேட்கவும். ம-அ-8-சு-113.

பிராமணனை விசாரித்து சூத்திரன் ஒருபொழுதும் தீர்மானம் செய்யலாகாது. வேதத்தில் ஷிவீதம் சொல்லப்பட்டிருக்கிறது. ம-அ-8-சு-20.

## 20. சத்தியம் கேட்க வேண்டிய விதம்

பிராமணனை சொல் என்றும், க்ஷத்திரியனை உண்மையைச்சொல் என்றும், வைசியனை, நீ பொய் சொன்னால் உன்னுடைய பசுவும், விதையும் பலியாது அழியும் என்றும், சூத்திரனை, நீ பொய் சொன்னால் மறையோனைக் கொன்ற பாவங்களை அடைவாய் என்றும் சத்தியம் கேட்கவும்.

ம-அ-8-சு-88.

சூத்திரன் பிரமாணம் செய்கிறவனை, நெருப்பில் பழுக்கக் காய்ச்சின மழுவாகிலும் எடுக்கச் செய்யவேண்டும். அல்லது தண்ணீரில் அமிழ்த்த வேண்டும். அவன் பிள்ளை, மனையாள், இவர்களின் தலையிலாவது அடிக்கவேண்டும்.

ம-அ-8-சு-114.

சூத்திரன் மழுவெடுத்ததில் கை வேகாமலும், தண்ணீரில் அமிழ்த்தப்பட்டவன் மிதக்காமலும், சாகாமலும், பிள்ளை, மனையாள் இவர்களின் தலையில் அடித்ததினால் யாதொரு துன்பம் நேரிடாமலும் இருந்தால் அவன் சொல்லும் பிரமாணம் சத்தியம் என்று உணரவேண்டும்.

ம-அ-8-சு-115.

## 21. பிராமணன் கொள்ளையிடலாம்

சூத்திரன்பொருளை பிராமணன் தன் இஷ்டம்போல் கொள்ளையிடலாம். ம-அ-9-சு-248.

மனையாள் பிள்ளை வேலைக்காரன் (சூத்திரன்) இவர்கள் சம்பாரித்தது. தலைவன் பிராமணனுக்குச் சேர்ந்தது. சம்பாதித்தவர்களுக்குப் பாத்தியமில்லை. ம-அ-8 சு-416.

அடிமை சூத்திரன் எவ்விதப்பொருளுக்கும் உடையவனாக மாட்டான்.

பிராமணன் சந்தேகமின்றி சூத்திரன் தேடிய பொருளைக் கைப்பற்றலாம். ம-அ-8-சு-417.

150 வருஷத்துக்குமுன் கொச்சி உண்ணிக்கண்டன், மணிக்கண்டன் கதையைப் பார்க்கவும்.

சூத்திரன் எவ்வளவு திறமையுள்ளவனாயிருந்தாலும் பொருளைச் சேர்க்கலாகாது.

சூத்திரனிடம் பொருள் சேர்ந்தால் பிராமணனுக்குத் துன்பம் வரும். ம-அ-10-சு-129.

வைசியனில்லாவிட்டால் யாகத்துக்கு 2, 3 அல்லது அதிக அங்கங்கள் குறைந்தாலும்,

சூத்திரன் செல்வமுள்ளவன் வீட்டில் யதேஷ்டமாக யோசனையின்றி கேளாமலும், வலிமையினாலும் கொள்ளையிடலாம். ஏனென்றால் அவனுக்கு ஒரு யாக சம்பந்தமுமில்லை. ம-அ-11-சு-13.

அதிக பசு முதலியவற்றால் செல்வமுடையவனையும், சோமபானம் பண்ணாதவனையும் இருக்கிற வைசியன் வீட்டிலிருந்து கேட்டும் கொடாவிட்டால், வலிமைசெய்தாவது யாகத்துக்கு வேண்டிய பொருளை பிராமணன் எடுத்துக் கொள்ளலாம். ம-அ-11-சு-12.

## 22. பொய் சொல்லலாம்.

அநேக ஸ்திரீகள் உள்ளவன் அந்த ஸ்திரீகள் சேர்க்கை விஷயத்திலும், விவாக விஷயத்திலும், பசு, மாடுகள், புல் விஷயத்திலும், பிராமணரைக் காப்பாற்றும் விஷயத்திலும் பொய் சொன்னால் குற்றமில்லை. ம-அ-8-சு-112.

பிராமணனைக் காப்பாற்றும் பொருட்டும், திருடன் பொருளை எடுத்துச் செல்லும் போதும், யாகம் செய்பவனைக் காப்பாற்றும் பொருட்டும், யுத்தம் செய்து, பிராமண ரல்லாதாரைக் கொன்றவனுக்கும், அதர்மம் (பாபம்) நேரிடாது. ம-அ-8-சு-143

## 23. புருஷரைக் காட்டிலும் பெண்களுக்கு அதிகம்.

ஸ்திரீகளுக்கு புருஷனைக் காட்டிலும் ஆகாரம் 2 பங்கு, புத்தி 4 பங்கு, ஸாஹஸம் 6 பங்கு, விருப்பம் 8 பங்கு. நீ-ஸா-சு-59.

## 24. பெண் விபசாரம் செய்தால் தண்டனை யில்லை

ஒரு கன்னிகை (மணமாகாதபெண்) போக விருப்பத்தினால் உயர்ந்தஜாதி புருஷனைச் சேர்ந்தால் அவளைக் கண்டிக்கப்படாது. தாழ்ந்தஜாதி புருஷனைச் சேர்ந்தால் அவளை வீட்டிலேயே கண்டித்து அடக்கவேண்டும். ம-அ-8-சு-379.

மாதரமுபைத்ய சுஸாரமுபைதி புத்ரார்தீத சகாமாத்திரா
பத்திரலோகோ நாஸ்திதத்,
ஸர்வம் பரவோ விந்துஹஃ தஸ்மாத் புத்ரார்த்தம் மாதரம்
ஸ்ராஞ்சாதி ரோஹதி॰

என்று வேதவாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

புத்ரார்த்த நிமித்தம்-தாயோடேயாகிலும், தமக்கையோடாகிலும், மகளோடேயாகிலும், பின்னையாரோடாகிலும் கூடலாம்.

சுந்தரமுள்ள புருஷனைக்கண்டால் சகோதரன், பிதா, புத்திரனானாலும் ஸ்திரீகளுக்கு காமம் உண்டாகிறது.
நீ-ஸா-சு-8.

5 பேர்கள் புருஷர்களிருந்தும் 6-வது புருஷன்மீதிலும் காமம் உண்டாகிறது. (புருஷர்கள் அகப்படாவிட்டால் எல்லாஸ்திரீகளும் பதிவிரதைகள்தான்.) நீ-ஸா-சு-9.

அத்திப்பூவையும், வெள்ளைக்காக்கையும் ஜலத்தில் மீன் காலைக்கண்டாலும் காணலாம். நாரி இருதயம்மாத்திரம் காணமுடியாது.
நீ-ஸா-சு-10.

பிராமணன் சூத்திரச்சியுடன் கூடினால் நரகத்துக்கும், பிள்ளையை உண்டுபண்ணினால் பிராமணத்துவமும் நீங்கும்.

## 25. பிராமணனுக்குத் தண்டனை யில்லை

பிராமணனை, எத்தகைய குற்றம் செய்தாலும் அரசன் கொல்ல நினைக்கக்கூடாது.
ம-அ-8-சு-381.

பிராமணன் எத்தகைய குற்றத்துக்கும் தூக்குப்போட வேண்டிய குற்றத்துக்கும், தூக்காமல் தலையை மொட்டையடித்துவிட்டால் அதுதான் தூக்குத்தண்டனை. மற்ற வர்ணத்தாருக்கு கொலையே தண்டனை. ம-அ-8-சு-379.

பிராமணன் கொடியகுற்றம் செய்தவனாயினும், கொலை செய்யாமலும், துன்பப்படுததாமலும் அவன் பொருளைக் கொடுத்து அயலூருக்கு அனுப்பவேண்டும். ம-அ-8 சு-380.

பிராமணன் அறியாமையினால் சூத்திரனைக்கொன்று விட்டால் 6 மாதகாலம் விரதமிருக்கவும். அல்லது 1 எருது, 10 வெள்ளைப் பசுக்களை வேதம்தெரிந்த பிராமணனுக்குக் கொடுக்க.
ம-அ-11-சு-130.

அல்லது, பூனை, அணில், கோட்டான், காடை, தவளை, நாய், உடும்பு, காக்கை இவைகளைக்கொன்ற பிராயச்சித்தம், சூத்திரனுக்குச் செய்க. ம-அ-11-சு-131.

மேற்சொல்லியவைகளை தெரியாமல் கொன்றால் 3நாள், பால் சாப்பிட்டுக்கொண்டு உபவாசம் இருக்கவும். அதற்கு சக்தியில்லையானால் 3நாள், நாள்தோறும் ஒரு யோசனைதூரம் நடக்கவேண்டும். அதற்கு முடியாவிட்டால் புண்ணியதீர்த்தத்தில் 3நாள் முழுகவேண்டும். அதற்கு முடியாவிட்டால் வருண மந்திரத்தையாவது 3நாள் ஜெபம் செய்யவேண்டும். ம-அ-11-சு-132.

மனு-11-அத்தியாயம் 162 முதல் 169 வரை படித்தால் பிராமணரின் செயல்கள் பல புலப்படும்.

பிராமணன், திருடி யாகம் செய்கிறவனை, அரசன் தண்டிக்கக்கூடாது. அரசனின் அறியாமையால் பிராமணன் பசித்து துன்பத்தை அடைகிறான். ம-அ-11-சு-21.

## 26. கல்யாணம்.

சூத்திரன் தன் குலத்திலும், வைசியன் 2 குலத்திலும், க்ஷத்திரியன் 3 குலத்திலும், பிராமணன் 4 குலத்திலும் செய்யலாம். ம-அ-3-சு-13.

## 27. பெண் சந்ததி மட்டும்.

பிராமணன் விவாகம் செய்துகொண்ட சூத்திரப்பெண் வயிற்றில் பிறந்த பெண், பிராமணனையே விவாகம் செய்துகொண்டு பெண் வார்சாக 7 தலை முறையிற் பிறந்தவர்கள் பிராமணர் ஆவரர்கள். ம-அ-10-சு-64.

க்ஷத்திரியனுக்கு 5 தலைமுறையும், வைசியனுக்கு 3 தலைமுறையும், மேலே கண்டபடி அந்தந்த ஜாதியில் கல்யாணம் செய்தல் (பெண் சந்ததிக்கு மட்டும்) அந்தந்த ஜாதி ஆவார்கள். ம-அ-10-சு-65.

மலையாளத்தில் எத்தனை தலைமுறையாகியும் பிராமணுள் சேர்க்கக் காணேம். ம-ம-41-42.

## 28. பிராமணன் கோபம் நாசம் பண்ணும்.

க்ஷத்திரியன் சர்ப்பம், பிராமணன் இளைத்திருந்தாலும் அவமானம் செய்யக் கூடாது. இவர்கள் சமயம் பார்த்து நாசம்பண்ணிப்போடுவார்கள். ம-அ-4-சு125 & 136.

பிராமணன் சாபத்தால், அக்கினி எல்லாப் பொருள்களையும் தகிக்கின்றவனும், சமுத்திரம் உவர் நீராகவும், சந்திரன் தேய்வையும் வளர்ச்சியையும் அடைகிறவனுமிருப்பதால் பிராமணனைப் பகைத்துக்கொள்ளுகிறவன் எவன்தான் அழியாதிருப்பான். ம-அ-9-சு-314.

பிராமணர்கள் கோபித்தால் சுவர்க்கலோகத்தையும் வேறாக சிருஷ்டித்து விடுவார்கள்.

திக்குப்பாலகர் தேவர்களையும் மனிதர்களாக்கி விடுவார்கள். பிராமணனைப் பகைக்கிறவன் எவனும் க்ஷேமத்தையடையமாட்டான். ம-அ-9-சு-315.

## 29. ஊரைவிட்டுத் துரத்தவேண்டியது

சூதாடுகிறவன், கூத்தாடி, பாடகன், கெட்ட நடையுள்ளவன், வேதங்களையும், ஸ்மிருதிகளையும் நிந்திப்பவன், விரதானுஷ்டானமில்லாதவன், ஆபத்தில்லாதபோது தன் ஜாதித் தொழிலைவிட்டு மற்றொரு ஜாதித் தொழிலைச் செய்பவன், குடியன். இவர்களை அரசன் பட்டணத்தைவிட்டுத் துரத்த வேண்டும். ம-அ-9-சு-225.

நீண்ட கொம்புள்ள எருதையும், வெட்கமற்ற விதவையையும், படிப்புள்ள சூத்திரனையும் தூரத்திலே வர்ச்சிக்க வேண்டும். நீ-ஸா-சு-90.

## 30. பாபம்

சக்தியிருந்தும் அக்னிஹோத்திரம் செய்யாமை, பொன் நீங்கலாக மற்ற பொருள்களைத் திருடுதல், கடனைத் தீர்க்காமை, பிறசமய நூற்களை யோதுதல், கூத்தாடுதல், பாடுதல், தானியம், உலோகம், (பொன் - பொருள்) பசு இவைகளைத் திருடுதல். ம-அ-11-சு-65.

குடிக்கிற மனைவியைக் கூடுதல், பெண்களையும் பிராமணாள் இல்லாதாரையும் கொல்லுதல், இவை எல்லாம் உபபாதகம் (குறைந்த பாவம்) என்றறிக. (11-வது அத்தியாயம் சு-56 முதல் 63 வரை இதேமாதிரிதானிருக்கிறது.)
ம-அ-11-சு-66.

## 31. தண்டனை.

அரசன் தன் கட்டளைக்கு மாறாக நடப்பவனையும், பொக்கிஷத்திலிருந்து பொருளை அபகரிக்கிறவனையும், தனக்கும் எதிரிக்கும் பகை உண்டுபண்ணுகிறவனையும் பலவிதமான கொடிய தண்டனைகளுக் குட்படுத்தலாம்.
ம-அ-9-சு-275.

இரவில் பூட்டை உடைத்து திருடுகிறவர்களின் கைகளைத் துண்டித்துக் கூர்மையான கழுவின் மீது ஏற்ற வேண்டும். ம-அ-9-சு-276.

வைசியன், சூத்திரன் தம் பொருள்களைக் கொடுத்து ஆபத்தைப் போக்கவேண்டும். ம-அ-11-சு-34.

## 32. அரசன் கடமை

அரசன் வைசிய சூத்திரர்களுக்கு தங்கள் தங்கள் குலத் தொழிலைச் செய்ய கட்டளையிடுக. இன்றேல் உலகம் அழிந்து விடும். ம-அ-8-சு-418.

மனுப்பிரஜாபதி வேதங்களின் கருத்து நன்றாய் உணர்ந்தவர். எந்த வர்ணத்தாருக்கு எந்த தர்மம் விதிக்கப்பட்டதோ அது வேத சம்மதமே யாம். ம-அ-2-சு-7.

க்ஷத்திரியன் புஜபலத்தினால் ஆபத்தைப்போக்க வேண்டும். ம-அ-11-சு-34.

க்ஷத்திரியனுக்கு இந்நூலிற் சொன்னபடி அரசியல் நடத்தும் ஞானம் தவமாகும். ம-அ-11-சு-235.

பிரஜைகளை சிருஷ்டித்து க்ஷத்திரியனிடத்தில் பிர்ம்மன் கொடுத்தார். ம-அ-9-சு-328.

அரசன் வைசியனை வட்டி வாங்குதல், வர்த்தகம் பயிரிடுதல், பசுவைக்காத்தல் இவைகளைச் செய்யச்சொல்லுதல்.
ம-அ-8-சு-410.

வைசியனுக்குப் பயிர் வர்த்தகம் இவைகளைக் குறித்த ஞானம் தவமாகும்.
ம-அ-11-சு-235.

வைசியன் பசுக்களை காப்பாற்றுமலிருக்கக்கூடாது. அவனிருக்க மற்றொருஜாதி காப்பாற்றக்கூடாது.
ம-அ-9-சு-334.

பிர்மன் பசுக்களை சிருஷ்டித்து வைசியனிடத்தில் கொடுத்தது.
ம-அ-9-சு-328.

அரசன் தக்கபடி (ஸ்மிருதிப்படி), தண்டனை செய்யாத போது அந்த தேசத்து எக்கியங்களில் புரோடாம்சத்தைக் காக்கை தின்றுவிடும். அவிசை நாய் முதலியது நக்கும். அவனவன் பொருள் அவனவனுக்குச் சொந்தமாக மாட்டாது. தாழ்ந்த ஜாதியாரும் உயர்ந்த ஜாதியாவார்கள்.
ம-அ-7-சு-21.

அரசன் தண்டனை செய்யாவிடில் உலகத்தார் ஜாதி மரியாதை நீங்கி நடப்பார்கள்.
ம-அ-7-சு 24.

அந்த தண்டபுருடனைத் தக்கபடி ஆளுகிற அரசன் தர்மார்த்த காரியங்களில் விருத்தியடையான்.

வேத ஸ்மிருதி முறைப்படி ராஜ்ஜிய பரிபாலனம் செய்யாமலிருக்கிற அரசனை அந்த தண்டத்தைக் கொண்டே மந்திரி முதலானவர்கள் கொன்றுவிடுவார்கள். ம-அ-7-சு-26.

அரசன் பிராமண குலத்தில் பிறந்தவன். கர்மானுஷ்டானமில்லையானால் செய்யவேண்டிய தீர்மானங்களைச் செய்யலாம்.
ம-அ-8-சு-20.

## 33. பிராமணன்-க்ஷத்திரிய அரசரை அடக்குதல்

சுவாதீனமுள்ள சக்தி 1. பராதீனமான அரசன் சக்தி 2. இதில் தன் சக்தியே உயர்ந்தது. பிராமணன் தன் சக்தி

யைக்கொண்டே பகைவர்களை அடக்கவேண்டும்.
ம-அ-11-சு-32.

சொற்படி நடவாத க்ஷத்திரியனை (பகைவனை) அடக்குவது அதர்வணவேதத்தில் சொல்லிய ஆங்கிரச முதலிய அபிசார (சூனியம்) மந்திரங்களை யோசியாமற் பிராமணன் பிரயோகிக்கலாம். அத்தகைய மந்திரமுள்ள வாக்கே பிராமணனுக்கு ஆயுதம். அதனால் அடக்கவேண்டியது.
மனு-அ-11-சு-33.

பிராமணன் அபிசார மந்திரத்தினால் ஜப ஹோமங்களினால் தன் ஆபத்தைப் போக்கவேண்டும். ம-அ-11-சு-34.

வேதம் ஸ்மிருதி ஜனங்கள் ஒழுகாத காலத்து (அரசனால் நடத்தப்படாத காலத்தில்) வர்ணாச்சார முறை அழியும்போது வர்ணாச்சாரத்தை காப்பாற்ற 3 வருணத்தாரும் ஆயுதம் எடுத்து யுத்தம் செய்யவேண்டும். ம-அ-8-சு-348.

பிராமணனுக்கு துன்பம் செய்கிற க்ஷத்திரியனை சாபத்தினாலாவது மாரண ஓமம் (சூனியம்) செய்தாவது ஒடுக்கவேண்டும். க்ஷத்திரியன் பிராமணனிடத்திலிருந்து உண்டானவனல்லவா? ம-அ-9-சு-319.

தண்ணீரிலிருந்து அக்கினியும், கல்லிலிருந்து ஹோமமும், பிராமணனிடமிருந்து க்ஷத்திரியனும் உண்டாயிற்று. எங்கும் வியாபித்திருக்கிற மேல்படி சக்திகள் தத்தம் பிறவித்தானங்களில் அடங்கிப் போகிறது. ம-அ-9-சு-320.

பிராமணரிடத்திலிருந்து க்ஷத்திரியர் பிறந்ததாய் மேலே கண்டவைகள் சொல்லுகிறது உண்மையா? பிரம்மா புஜத்திலிருந்து க்ஷத்திரியர் உண்டானது உண்மையா? என்கிறார்கள்.

## மதுரை, சித்தர். A. V. R. S.
## தத்துவ ஆராய்ச்சி நிபுணரால்
## தொகுக்கப்பெற்ற புஸ்தகங்கள்.

No. 1 ஸ்மிருதி விளக்கம்.
,, 2 சிவமத விளக்கம்.
,, 3 புத்தர்மத விளக்கம்.
,, 4 தசாவதார விளக்கம்.
,, 5 இஸ்லாம்=மகம்மதிய மத விளக்கம்.
,, 6 ஈஸாநபி=ஏசுநாதர் கிறிஸ்துவ மத விளக்கம்.

---